


# கல்கி

ஸ்வீட்டா...ஸ்டைலா...ஸ்மார்ட்டா...

KALKI • 19.10.2008 • ரூ.10.00 • 96 பக்கங்கள்



**"சினிமா ரொம்ப Bore!"**

- குஷ்பூ காரசாரம்



**"உயிர் பெறுமா ஊராட்சி?"**

- தி.மு.க. ஊராட்சித் தலைவர் குமுறல்

# இது தான் உங்கள் கவலையா?

- ✦ சரியான வளர்ச்சியின்மை!
- ✦ படிப்பில் கவனம் செலுத்த இயலாமை
- ✦ அடிக்கடி உடல்நலமின்மை & சோர்வு!
- ✦ தேர்வில் குறைவான மதிப்பெண்கள்

## கவலை வேண்டாம் !

இப்பொழுதே கொடுக்க ஆரம்பியுங்கள்

# குரோமாஸ் JUNIOR

**சமச்சீரான போஷாக்கு**

## பிறகு பாருங்கள் வித்தியாசத்தை

**குரோமாஸ்** JUNIOR
சமச்சீரான போஷாக்கு

- ✦ உங்கள் குழந்தையின் முழுமையான மற்றும் சீரான வளர்ச்சிக்கு (உயரம், எடை) உதவுகிறது.
- ✦ நோய் எதிர்ப்பு சக்தியை அதிகரிக்கிறது.
- ✦ உடலுக்குத் தேவையான விட்டமின்களைத் தருகிறது.
- ✦ உங்கள் குழந்தையின் ஆரோக்கியத்தை உறுதி செய்கிறது.

**உபயோகிக்கும் முறை**
ஒரு ஸ்பூன் குரோமாஸ் ஜூனியரை மிதமான அல்லது இளஞ்சூடான பாலுடனோ அல்லது தண்ணீருடனோ கலந்து கொடுக்கவும்.

டோஸ்: ஒரு டோஸ் குரோமாஸ் காலை உணவுக்குப் பிறகு
ஒரு டோஸ் குரோமாஸ் பள்ளியிலிருந்து வந்தவுடன்
ஒரு டோஸ் குரோமாஸ் இரவு படுக்கப் போகும் முன்.

**250 gm.**
**Rs.88/-**



அனைத்து மருந்து
கடைகளிலும் கிடைக்கும்.




For any queries contact our help line:
ph: 9940018925, mail id : gromass_junior@yahoo.com

தைலாபுரம் தோட்டம். மக்கள் தொலைக்காட்சியில் வர இருக்கும் ஒரு தொடருக்கான காட்சிகளைப் பார்த்துக் கொண்டிருந்தார் டாக்டர் ராமதாஸ். தமிழக அரசியல் கூட்டணிகளை மாற்றிக்காட்டும் அளவுக்கு, பிரதான பிரச்னையாக மாறி விட்ட இலங்கைத் தமிழர் குறித்த கேள்வி களுடன் துவங்கினோம்...

**இலங்கைப் பிரச்னை - அமைதி காத்தது ஏன்?**

எங்களைப் பொறுத்தவரை பிரதமரைச் சந்திக்கும் வாய்ப்பு கிடைக்கும்போதெல் லாம், 'இலங்கைப் பிரச்னையில் மத்திய அரசு வேடிக்கை பார்க்கக்கூடாது' என்று கடிதம் கொடுத்திருக்கிறோம். 'நிச்சயம் கவனிக்கிறோம்' என்று பதில் மட்டும் எழுதுகிறார்கள். அதற்கு மேல் ஒன்றும் நடக்காது. ஆனால், மத்திய அரசின் பெரிய கட்சியாகப் பங்கு வகிக்கும் தி.மு.க. பிரச்னையைத் தீர்க்க முயற்சி எடுத்திருக்க வேண்டும். முனைப்பு காட்டி யிருக்க வேண்டும். எதிர்க்கட்சிகள், தோழ மைக் கட்சிகள் பிரச்னையைக் கையில் எடுத்ததும், தி.மு.க. விழித்துக் கொண்டிருக் கிறது. இந்த நிலையில் முதல்வர் என்ற முறையில் அவர் எடுக்கும் நடவடிக்கை களுக்கு ஆதரவு தருவதே ஆக்கபூர்வமாக இருக்கும்.

**கொள்கை மாற வேண்டும்:**

இலங்கை விவகாரத்தில் இந்திய அரசு முழுக்க முழுக்க தவறான வெளியுறவுக் கொள்கையைக் கடைப்பிடித்து வருகிறது. அதிகாரிகள் பிரதமரைத் தவறாக வழி நடத்துகிறார்கள். ராஜீவ் மரணத்துக்குக் காரணம்கூட மத்திய அரசு கையாண்ட தவறான கொள்கைகள்தான். இந்த விஷயத் தில் பல குழப்பங்களுக்கும், தெளிவற்ற நிலைக்கும் காரணம், அதிகாரிகளின் செயல்பாடுகள்தான்.



# பா.ம.க

**ஒட்டும் இல்லை; உறவும் இல்லை:**

தங்களது அத்தியாவசியத் தேவைகளுக்கு அருகில் உள்ள ஒரே நாடான இந்தியாவை அணுகு வது இலங்கைத் தமிழர்களுக்குத் தவிர்க்க முடியாதது. ஆனால், விடுதலைப்புலிகளுக்கு இந் தியாவிலும், தமிழகத்திலும் எந்த வேலையும் இல்லை. தங் கள் செயல்பாடுகளை அவர் கள் இலங்கைக்குள் வைத்துக் கொள்ள வேண்டும். துவக்கக் காலத்திலிருந்து இன்றுவரை

பா.ம.க.வுக்கும், விடுதலைப்புலிகளுக்கும் எந்தத் தொடர்பும் இல்லை என்பதை வலியுறுத்திக் கூறிக் கொள்கிறேன். இந்தப் பிரச்னையை சிறுபான்மைத் தமிழினத்தின் பாதுகாப்பு என்ற அடிப்படையிலேயே அணுகுகிறோம்.

**"தமிழகத்தில் சிகரெட் தடைச் சட்டத்தைத் தீவிரமாக அமுல் படுத்த வேண்டும். இதில் சமரசத்துக்கு இடமில்லை."**

**மீண்டும் தி.மு.க. உறவு:**

இலங்கைப் பிரச்னையில் முதல்வரை ஆதரிப்பதால், மீண்டும் தி.மு.க.வுடன் நெருங்குகிறீர்களா என்று கேட்கிறார்கள். இது அரசியல் பேச வேண்

# தனிமரமா?

## டாக்டர். ராமதாஸ் பேட்டி

டிய நேரமில்லை. நல்ல முயற்சிக்கு ஆதரவு கொடுத்து ஆக்கபூர்வமான யோசனைகள் சொல்ல வேண்டும்.

**காங்கிரஸ் கட்டாயப்படுத்துகிறதா?**

தி.மு.க. கூட்டணியில்தான் தொடர வேண்டும் என்று காங்கிரஸ் தரப்பில் எங்களை யாரும் கட்டாயப்படுத்தவில்லை.

**பா.ம.க தனிமரம் ஆகிவிட்டதா?**

தி.மு.க. கூட்டணியில் பா.ம.க. இல்லை. அதேசமயம் வேறு அணியிலும் சேரவில்லை. எனவேதான் பா.ம.க. தனிமரமாகிவிட்டதா என்று




# கல்கி

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர்: லக்ஷ்மி நடராஜன்

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர்: சீதா ரவி
உதவி ஆசிரியர்: கதிர்பாரதி
வடிவமைப்பு: எஸ்.ஸ்டீஃபன், எம்.மோகன், ச.கார்த்திகேயன்

தொலைபேசி: 044 - 4343 8888 (30 lines)
தொலைநகல்: 044 - 4343 8899
மின்னஞ்சல் - ஆசிரியர் குழு: kalki@kalkiweekly.com
விளம்பரப் பிரிவு: marketing@kalkiweekly.com
சந்தா பிரிவு: subscription@kalkiweekly.com
பிற தகவல்கள்: info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி: www.kalkionline.com

சந்தா விவரம் - உள்நாடு:
ஒரு வருடம் : ரூ. 500/-
ஆறு மாதம் : ரூ. 270/-
வெளிநாடு (விமானத்தபால்):
ஒரு வருடம் : ரூ. 3,800/-

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.

விமர்சனம் எழுகிறது. தேர்தல் நெருக்கத்தில்தான் கூட்டணி அமையும். 2001 தேர்தலில் அ.தி.மு.க.வுடன் கூட்டணி அமைத்து சட்டமன்றத் தேர்தலில் வென்றோம். மூன்றே மாதத்தில் பிரிந்தோம். அதன்பின் 2004ம் ஆண்டு தேர்தலின்போதுதானே தி.மு.க. கூட்டணியில் இணைந்தோம். 1998 முதல் பார்த்தால் பாராளுமன்றம், சட்டமன்றம் என்று எந்தத் தேர்தலை எடுத்துக்கொண்டாலும், பா.ம.க. இருந்த அணியே வெற்றிக்கொடி நாட்டி வருகிறது. இந்த முறையும் அதுதான் நடக்கும்.

**நடிகர்கள் கட்சி - நட்பு உண்டா?**

இந்த முறை நடிகர்கள் தலைமை தாங்கும் கட்சிகள் இருக்கும் கூட்டணியில் பா.ம.க. இடம் பெறும் நிலை அமையாது என்பதே என் அழுத்தமான கருத்து. நடிகர்கள் கட்சி இருக்கும் கூட்டணியில் நாங்கள் இருக்க மாட்டோம்.

**புகைக்குப் பகை :**

இந்தியாவில் வருடத்துக்குப் பத்து லட்சம் பேர் புற்றுநோயால் இறந்து போகிறார்கள். நோய்க்கு முதன்மைக் காரணம் புகை பிடிப்பதுதான். 1989 முதலே, புகையிலை மற்றும் மதுவுக்கு எதிரான எங்கள் போராட்டங்கள் நடக்கின்றன. உலகிலேயே புகையிலை மற்றும் மது உற்பத்தியாளர்கள்தான் அதிகாரத்தில் மிகவும் செல்வாக்குப் பெற்றவர்கள். இவர்களை எதிர்த்து ஆளும் அரசியல்வாதிகள் ஒன்றும் செய்ய முடியாது. ஆனால், கடந்த அறுபது ஆண்டுகளில் முதல்முறையாக அமைச்சர் அன்புமணி, புகையிலை லாபியை எதிர்த்துப் போராடி வெற்றி பெற்றிருக்கிறார். தமிழக அரசு உட்பட எல்லா மாநிலங்களிலும், சிகரெட் தடைச் சட்டத்தைத் தீவிரமாக அமுல்படுத்த வேண்டும். இதில் சமரசத்துக்கு இடமே கிடையாது. இதில் சுணக்கம் ஏற்பட்டால் பா.ம.க. போராட்டம் நடத்தும். மதுவுக்கு எதிராக எங்கள் போராட்டம் தொடர்கிறது. நாம் குழந்தைகளைக் கல்வியாளர்களாக மாற்றுகிறோமோ இல்லையோ, குடிகாரர்களாக மாற்றிக் கொண்டிருக்கிறோம். பதின்மூன்று வயதிலேயே மாணவர்கள் குடிகாரர்களாக மாறிக்கொண்டிருக்கிறார்கள். கேட்கவே வயிறு எரிகிறது. பூரண மதுவிலக்கு ஒன்றே நாட்டைக் காப்பாற்றும்.

**“நடிகர்கள் தலைமை தாங்கும் கட்சிகள் இருக்கும் கூட்டணியில் பா.ம.க. இடம் பெறாது.”**



– ப்ரியன்

# "சினிமா ரொம்ப Bore!" - குஷ்பூ காரசாரம்

**ஜீ டீ.வி. நிறுவனம் ஆரம்பித்துள்ள தமிழ் சேனலில், குஷ்பூவின் சீரியல் 'ருத்ரா' அமர்க்களமாக ஆரம்பித்துள்ளது. சீரியல் குறித்துப் பேசும்போது, சீரியஸான நம் கேள்விகளுக்கும் ஈடுகொடுத்துப் பேசினார்...**

**'ருத்ரா' ஸிரிசின் கதாநாயகியா?**

''இல்லை; எனக்கு அந்த மாதிரியான கதாபாத்திரங்கள் பிடிக்காது. மக்களுக்கு ஏற்கெனவே ஏகப்பட்ட பிரச்னைகள். நான் வேறு அவர்களைச் சோகத்தில் ஆழ்த்த வேண்டுமா? எனக்குச் சுயமாகச் சிந்தனை செய்யும், புத்திசாலியான கதாபாத்திரங்களை வைத்து, சீரியல் எடுக்கத்தான் பிடிக்கும். இரண்டு வருடங்களுக்கு முன் எடுத்த 'கல்கி' தொடர் கூட அப்படித்தான்.

ருத்ராவும் கல்கியைப் போலவே அர்த்தமுள்ள கேரக்டர். ஓர் அன்பான மனைவி, பாசமான தாய், நல்ல மருமகள் இப்படிப் பட்டவள்தான் ருத்ரா. மிகவும் பொறுமையானவள். ஆனால், பொறுமையின் எல்லைக்கோடு என்ன என்பதை நன்றாக அறிந்தவள். டீன் ஏஜ் பெண்கள் முதல் முதிய பெண்கள் வரை அனைவரும், ருத்ராவின் கேரக்டரில் தங்களையே காண்பார்கள்.''

**சினிமாவுக்கு குட்பை சொல்லி விட்டீர்களா?**

''ஆமாம். சும்மா திரையில் வந்து விட்டுப் போவது எனக்குப் போரடித்து விட்டது. நானும் எத்தனையோ கதைகள் கேட்டுவிட்டேன். ஆனால், ஒன்றுகூட 'நல்ல கேரக்டர்; இதில் நடிக்க வேண்டும்' என்ற எண்ணத்தை எனக்குக் கொடுக்கவில்லை. எனவே, திருமணத்துக்குப் பின் சினிமாவில் நடிப்பதைக் குறைத்துக் கொண்டேன். குழந்தைகள் பிறந்த பிறகு முற்றிலுமாக நிறுத்திவிட்டேன்.

ஆனால், ஒரு விஷயம். என்னுடைய ஜாக்பாட் ஷோவும், டீ.வி. சீரியல்களும்

மக்கள் மத்தியில் மிகப் பெரிய அளவில் வரவேற்பு பெறுவதற்குக் காரணம், எனக்கு சினிமா மூலம் கிடைத்த புகழ்தான்.''

**இரண்டு பெண் குழந்தைகளுக்கு அம்மாவாக இருக்கும் அனுபவம்?**

''நான் எவ்வளவு பிஸியாக இருந்தாலும், ஒரு தாயாக என் குழந்தைகள் மீது முழு கவனம் செலுத்துவதில் தவறுவதே இல்லை. அவர்களை, பள்ளிக்கூடத்தில் கொண்டுபோய் விடுவது, அழைத்துக் கொண்டு வருவதுகூட நான்தான். சினிமாக்களை ஒதுக்கிவிட்டு, சொந்தமாக டி.வி. சீரியல் தயாரிக்க முடிவு செய்ததற்கு இதுவும் ஒரு காரணம்.''

**பிஸினசா ஆகிட்டு வருதே?**

''ஒரு பெண், தன் வயிற்றுக்குள்ளே கருவைச் சுமக்கிறதும், அப்போது ஒவ்வொரு வினாடியும் அவளுக்கு ஏற்படுகிற அனுபவமும், அந்தப் பெண் மட்டுமே அனுபவிக்கும் விஷயம். அது ரொம்பவும் எமோஷனலானது. பணம் கொடுத்து, ஒரு பெண்ணுடைய ஏழ்மையைச் சுயநலமாப் பயன்படுத்திக்கொள்வது என்பது அக்கிரமம். பத்து மாதங்கள் சுமந்து பெற்ற குழந்தையின் தொப்புள்கொடியைக் கட் பண்ணறபோதே, அந்தக் குழந்தையுடனான பந்தத்தையும் வலுக்கட்டாயமா கட் பண்ணறது ரொம்பத் தப்பு.''

**"எனக்குக் கடவுள் நம்பிக்கை இல்லை. ஆனால் என் கருத்தை யார் மீதும் திணிக்கமாட்டேன்!"**



**நடிகர் சுந்தர்.சி. ஓ.கே... டைரக்டர் சுந்தர்.சி.?**

''டைரக்டர் சுந்தர்.சி.யை நான் தினமும் வீட்டுல பார்த்துக்கிட்டுத்தான் இருக்கேன். நேரம் கிடைக்கிறபோதெல்லாம் படத்துக்கு ஸ்கிரிப்ட் எழுதிக்கிட்டே இருக்கார். அவருக்குள்ளே இருக்கிற டைரக்டர், இன்னும் சுறுசுறுப்பா இயங்கிக்கிட்டுத்தான் இருக்கார். அடுத்த வருஷம், ஒரு படம் இயக்கறதுக்கு ரெடியாகிக்கிட்டிருக்கார்.''

**வாடகைத்தாய் இந்தியாவுல பெரிய**

**மதத்தின் பெயரால் நிகழும் தீவிரவாதம்... கலவரம்... குறித்த உங்கள் கருத்து என்ன?**

''எனக்குக் கடவுள் நம்பிக்கை இல்லை. ஆனால், என் கருத்தை நான் யார் மீதும் திணிக்கமாட்டேன். மதம் என்பது வீட்டின் நான்கு சுவர்களுக்குள்ளே இருக்க வேண்டும்; அதைத் தெருவுக்குக் கொண்டு வரக் கூடாது.

தீவிரவாதத்துக்குப் பலியாகிறவர்கள் அப்பாவி மக்கள்தானே? இந்து, முஸ்லிம், கிறிஸ்தவர் என்று பார்க்காமல், சக இந்தியனைக் கொல்லலாமா என்று தீவிரவாதிகள் சிந்திக்கட்டும், அவர்கள் மனதிலிருக்கும் வன்மம் அழியட்டும்.''

சந்திப்பு : **எஸ். சந்திரமௌலி**

## “என் கணவரோட மூட பிரைட் ஆக்கறது இப்ப ஒரு சட்டைய துவைக்கற மாதிரி சுலபம்.”

- திருமதி உஷா சந்திரன்

என் கணவருக்கு ஒரு லக்கி ஷர்ட் உண்டு. அவர் அத போட்டுக்கிட்டா அது முக்கியமான நாள்னு தெரிஞ்சிடும். சமீபத்துல என் அண்ணி கம்ஃபர்ட் உபயோகிக்க சொன்னாங்க. எத்தன முறை துவைச்சாலும் ஷர்ட் பளபளன்னு இருக்கறத பாத்து நான் அசந்துட்டேன். அது எப்படி என் கணவர் மூட மாத்துதுன்னு சொன்னா தமாஷா இருக்கும். அவர் அத எப்ப போட்டுக்கிட்டாலும் அட்டகாச மூட்ல இருப்பாரு. போட்டுக்கிட்டதுமே மூட் மாறிடும். அவ்வளவு சுலபம். நீங்களும் ட்ரை பண்ணி பாருங்க.




கம்ஃபர்ட் உபயோகிக்கும் முறை: 1 துணிகளை வழக்கம்போல் டிடெர்ஜெண்டால் துவையுங்கள் 2 இப்போது அரை பக்கெட் தண்ணீரில் அரை மூடி கம்ஃபர்ட்டை சேருங்கள் 3 துவைத்த துணிகளை ஐந்து நிமிடம் வரை பக்கெட்டில் ஊற வையுங்கள் 4 துணிகளை எடுத்து மறுபடியும் அலசாமலேயே காயப்போடுங்கள்

# வட்டமேஜை

**ஒ**ரிஸ்ஸாவின் மதக்கலவரங்களைப் பற்றிய அக்கறையில்லாமல், பொறுப்பைத் தட்டிக் கழிக்கும் மத்திய அரசு; மாநில அரசின் மந்தநிலை; இவற்றைக் கண்டித்தும், மதத் தலைவர்களின் ஆக்கபூர்வ முயற்சிக்கு பாராட்டு தெரிவித்தும் அமைந்த தலையங்கம் பாராட்டுக்குரியது.

**- எஸ். சிவராமன், வத்தலக்குண்டு.**

**கா**லத்தால் மறக்க முடியாத 'ஞாயிறு என்பது




கண்ணாக' என்ற பாடலை மையப்படுத்தி தஞ்சாவூர்க் கவிராயர் எழுதிய டூயட்கதை, மீண்டும் ஃபிளாஷ்பேக்கில் பயணிக்க வைத்தது.

**- பி. கலைச்செல்வன், கும்மிடிப்பூண்டி.**

**வா**ர்த்தை உச்சரிப்பு மட்டுமல்ல; அதைப் பாடுகின்ற பாவம், குரல் வேறுபாடு என்று டி.எம்.எஸ். தன் குரலில் நிகழ்த்திய அற்புதங்கள் பல. அவரைப் பற்றிய ஆவணப்படம் செய்தியில், ஏ.ஆர். ரஹ்மான் தந்திருந்த நினைவுகளும் சுவையானவை.

**- என். சதீஷ்குமார், ஈரோடு.**

'**ம**ருத்துவ தர்மத்தைப் போல, திருமணத்துக்கு முன் மணமக்கள் மருத்துவப் பரிசோதனை செய்து கொள்வதும் தர்மமாக மதிக்கப்பட வேண்டும்' என்ற தராசு பதில் 'நச்'.

**- கீதா ஸ்ரீநிவாசன், ஹோசூர்.**

'**தா**ன் பூவை இழந்தாலும், பெண்ணுக்குச் சுமங்கலி என்னும் அழகைத் தரும் தியாகி செடி'. கிரேஸியின் பதிலில் அருமையான முரண்! சபாஷ்!

**- என். சுப்ரமணியன், செங்கல்பட்டு.**

**வா**டகைத் தாய் என்பது மருத்துவத்தின் முன்னேற்றமாய் இருக்கலாம். ஆனால், ஆதரவற்ற குழந்தைகள் உள்ள நம் நாட்டில், அந்தக் குழந்தைகளைத் தத்தெடுப்பதுதான் சரியானதாக இருக்கும்.

**- மணியன், விருத்தாசலம்.**

'**வெ**ந்ததும் வேகாததும்' என்ற தலைப்பில் புத்தகம் எழுதும் சங்கரநாராயணனின் பேச்சு, நன்கு வெந்து (பக்குவப்பட்டு) இருக்கிறது. கைப்பக்குவம் மட்டுமல்ல; பேச்சிலும் பக்குவம் இருப்பது கூடுதலான அழகு!

**- வெங்கடாசலம், மதுரை.**

**உ**லகே மாயமாக இருந்தாலும், அதிலுள்ள விஷயங்கள் படிப்பதற்கு ஹாயாக இருக்கின்றன.

**- ஆர்.ஏ. அமுதன், சென்னை - 10.**

# “பொம்பளைங்க தயாராக நிறைய நேரம் எடுத்துப்பாங்கன்னு சொல்றவங்க என் கணவர பாக்கணும்.”

- திருமதி வித்யா மணவாளன்

எல்லாம் என் தங்கை ஒரு சாஷே கம்ஃபர்ட் குடுத்ததுலேர்ந்து தொடங்கிச்சி. அத உபயோகிச்சதும், என் துணிகள் மென்மையாவும் வாசனையாவும் இருக்கறத பாத்து ஆச்சரியப்பட்டுட்டேன். ஆனா அதுல ஒரு பிரச்சனை இருக்கு. இப்ப என் கணவரு ஆற அமரதான் தயாராகிறாரு. ஷர்ட் ஃப்ரெஷ்ஷாவும் போட்டுக்க சுகமாவும் இருக்கறதுல அப்படியே மயங்கிடறாரு. மத்த எல்லாரையும் பத்தி கேக்காதீங்க. அவருக்காக காத்திருக்கறத தவிர வேற வழி. உபயோகிங்க, அப்பறம் நான் சொல்றது புரியும்.

அழையுங்கள்
1800-22-8080.
வாருங்கள், கம்ஃபர்ட் மகிமையை பகிர்ந்து கொள்ளுங்கள்.

கம்ஃபர்ட்டை உபயோகிக்கும் முறை: 1 துணிகளை வழக்கம்போல் டிடெர்ஜென்ட்டால் துவையுங்கள் 2 இப்போது அரை பக்கெட் தண்ணீரில் அரை மூடி கம்ஃபர்ட்டை சேருங்கள் 3 துவைத்த துணிகளை மூன்று நிமிடம் வரை பக்கெட்டில் ஊற வையுங்கள் 4 துணிகளை எடுத்து மறுபடியும் அலசாமலேயே காயப்போடுங்கள்

# நீங்கள்



● மன்னனின் மைந்தர்!

● என்.கௌரி, ஹோசூர்

? ராஜஸ்தானில் கிராம வேலை வாய்ப்புத் திட்டத்தில் ராகுல் காந்தி மண் சுமந்தது எதற்காக?

! பிட்டுக்காகச் சுமக்கவில்லை, நிச்சயம்! ஒருவேளை 'ஸ்டண்டு'க்காகச் சுமந்திருக்கலாம்! எப்படியோ, ஏழைகளின் விடிவுகாலம், கிராமப்புற வேலை வாய்ப்புத் திட்டத்தில் இல்லை; விவசாயம் சார்ந்த தொழில்களை கிராமப்புறங்களில் தொடங்க ஊக்கமளிப்பதில்தான் உள்ளது என்பதைப் புரிந்துகொண்டால் சரி.

● எம். பாஸ்கர், திண்டுக்கல்

? 'அமெரிக்காவில் ஏற்பட்டுள்ள நிதி நெருக்கடி இந்தியாவில் ஏற்படாததற்கு நாங்கள்தான் காரணம்' என்று பிரகாஷ் காரத் பெருமைப்பட்டுக் கொள்கிறாரே?

! டபுள் ராங்! இங்கே நிதிநெருக்கடி இல்லை என்பது போல் பேசியது பொருளாதார ரீதியில் தவறு. நிலவும் நெருக்கடிக்குத் தாங்களே காரணம் என்று ஒப்புதலளித்தது அரசியல்ரீதியான தவறு.

● மா. மாரியம்மாள், சங்கரபாண்டியபுரம்

? தமிழக போலீஸ் வசம் இருக்கும் மோப்ப நாய்களுக்கு விஜய், விக்ரம், சூர்யா, அஜித் என்று பெயர் வைத்திருக்கிறார்களே?



● பெருந்தவறு திட்டங்கள்!

# ராகுல் காந்தி மண் சுமந்தது

# கேட்டலை

# தராசு

! அவையும் டூப் கேட்காமலிருந்தால் சரி!

● **லெ.நா. சிவகுமார், சென்னை - 33**

***? ''ரூபாய்க்கு ஒரு கிலோ அரிசி, ஐம்பது ரூபாய்க்குப் பத்து மளிகைப் பொருட்கள் இத்யாதி திட்டங்களைக் குறை கூறும் கட்சிகள், தாங்கள் ஆட்சிக்கு வந்தால், இந்தத் திட்டங்களை அமல்படுத்த மாட்டோம் என்று கூறத் தயாரா?'' என முதல்வர் சவால் விடுகிறாரே?***

! வோட்டுக்காக, மக்களை மயக்கும் திட்டங்களை அமுல்படுத்திவிட்டு, இப்படிச் சவால் விடுவது அறியாமை. இன்றைய தவறுகள் என்றும் தொடரும் என்பதாலேயே இன்றைய முதல்வரின் தவறுகள் பெருந்தவறுகள் ஆகின்றன. தமிழகமும் தமிழரும் இத்தகைய திட்டங்களால் முன்னேற முடியாது.

● **க.நா. இராஜேஸ்வரன், மொரட்டுப்பாளையம்**

***? முதுபெரும் காந்தியவாதிகளான கிருஷ்ணம்மாள் - ஜகந்நாதன் தம்பதிக்கு 'மாற்று நோபல் பரிசு' என்று சிறப்பித்துச் சொல்லப்படும் வாழ்வுரிமை விருது வழங்கப்பட்டுள்ளது பற்றி...?***

! ஓய்வு பெற வேண்டிய வயதில் ஓடி ஓடி சமூகப்பணி ஆற்றும் போராளி தம்பதிக்குக் கிடைத்துள்ள போற்றுதலுக்குரிய அங்கீகாரம்.

● **தவமணி, தேனூர்**

***? ''தாங்கள் ஆட்சிக்கு வந்தால் விவசாய விளைநிலங்களில் தொழிற்சாலை அமைக்க அனுமதிக்க மாட்டோம்'' என்று சிரஞ்சீவி உறுதி கூறுகிறாரே?***

! இது அடிப்படை சுதந்திரத்தில் தலையிடும் தவறான அணுகுமுறை. தொழிலதிபர்கள் தேவையான நிலத்தை மார்க்கெட் விலையில் கிடைத்தால் வாங்கிக் கொள்ளட்டுமே! அரசு தலையிடாக் கொள்கையை அனுசரித்தால் போதும். ஆனால், விலை நிர்ணயித்துக் கையகப் படுத்துதல், இலவசமாகவும் தேவைக்கு அதிகமாகவும் தொழிலதிபர்களுக்கு வழங்குதல் போன்றவற்றில்தான் ஆட்சியிலுள்ளோருக்கு ஆதாயம்.

● **பி.பாலாஜி கணேஷ், கோவிலாம்பூண்டி**

***? சீனாவிலிருந்து பால் பொருட்களை இறக்குமதி செய்ய மத்திய அரசு தடை விதித்துள்ளது பற்றி...?***

! அதில் கலந்துள்ள ஒரு ரசாயனப்



✱ டபுள் ராங்!

# எதற்காக?

என்று, நாலு நாட்களுக்கு ஒரு முறை ஃபோட்டோ எடுத்துக்கொண்டு செய்தி அளித்த போது, இதையும் எண்ணிப் பார்த்திருக்க வேண்டாமா!



* விபரீத உறுதி!



* ஓயாத உயர்பணி



* பெயரளவு ஹீரோக்கள்?

பொருள், உடல்நலக் கேட்டை விளைவித்து, கோடிக்கணக்கான சினர்களைப் பாதித்துள்ளதை மிகத் தாமதமாகக் கண்டுபிடித்து, சீனாவிலேயே விழித்துக் கொண்ட பிறகுதான் இங்கே நடவடிக்கை!

● **கே.கணேசன், மறைமலைநகர்**

***? கடந்த இரண்டரை ஆண்டு தி.மு.க. ஆட்சியில் தமிழக மின் உற்பத்தி 13 சதவிகிதம் அதிகரித்துள்ளதாக முதல்வர் பெருமிதப்படுகிறாரே?***

! அதேசமயம், மின் தேவை அதைப்போல் பல மடங்கு பெருகியுள்ளதே! தொழில் தொடங்க உரிமம்; எம்.ஓ.யூ

● **என்.காளிதாஸ், சிதம்பரம்**

***? பெங்களூரில் கிறிஸ்துவ தேவாலயங்கள் மீது தாக்குதல் நடத்தப்பட்டது பற்றி...?***

! பிற மதங்களைத் தாக்குவதால் நமது மதம் பலப்படாது. அவரவர் மதக் கோட்பாடுகளை முறையாகத் தெரிந்துகொண்டு, வழுவாமல் கடைப்பிடிப்பதன் மூலமே தத்தமது மதங்களைப் பலப்படுத்த முடியும் என்கிற பக்குவ அறிவை இழந்துவிட்டதன் பிரதிபலிப்புதான், இத்தகைய தாக்குதல்களும் அவற்றைத் தூண்டும் வன்செயல்களும்.

● **என்.சண்முகம், சேலம் - 1** ★

***? கோத்ரா ரயில்பெட்டி எரிப்பு சம்பவத்தை ஆராய்ந்த பானர்ஜி கமிஷனின் அறிக்கையும், அதே நிகழ்வை அலசிய நானாவதி கமிஷன் அறிக்கையும் ஒன்றிற்கு ஒன்று முரண்படுகின்றனவே?***

! கமிஷனை யார், எந்த நோக்கில் நிறுவுகிறார்கள் என்பதைப் பொறுத்துதான் இந்நாளில் அறிக்கைகள் அமைகின்றன. அவை நடுநிலையான தீர்ப்புகள் அல்ல. அரசியல் கண் துடைப்புகள்.

● **இரா. ஜெய்கணேஷ், இராஜபாளையம்** ❐

***? தமிழக அரசு பத்தாயிரம் அரசு பஸ்களில் ஒரே நேரத்தில் ஒரே திரைப்படத்தையும் அரசின் சாதனைகளையும் ஜி.பி.ஆர்.எஸ். முறைப்படி ஒளிபரப்பப் போகிறதாமே? இதெல்லாம் அவசியம்தானா?***

! அவசியமில்லை என்பதுடன் அநியாயமும்கூட. வரிப்பணத்தில் ஆளுங்கட்சிக்கு நடக்கும் தேர்தல் பிரசாரம். ○

❐ **ரூ.100/- பரிசு பெறுபவர்:**

**இரா.ஜெய்கணேஷ்,** இராஜபாளையம்

★ **ரூ.50/- பரிசு பெறுபவர்:**

**என்.சண்முகம்,** சேலம் - 1



# கல்கி




2008 அக்டோபர் 19
ஸர்வதாரி ஐப்பசி 3
மலர் : 67
இதழ் : 12


தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா – *பாரதியார்*

## புலிகளின் பிடிவாதத்தால் பெருகும் சோகம்!

ஈழத் தமிழர்கள் படுகொலை செய்யப்படுவது குறித்து தமிழக முதல்வர் உருகிப் பேசிய அதே தினத்தில்தான், விடுதலைப்புலிகள் ஒரு முன்னாள் ராணுவ அதிகாரியைக் கொல்லச் சதி செய்துள்ளனர். மனித வெடிகுண்டை அனுப்பி, அனுராதபுரத்தில் பெரும் சேதம் ஏற்படுத்தியுள்ளனர். 28 பேர் இந்தக் கொடூரத்தில் இறந்தது பற்றியோ, தொண்ணூறுக்கும் மேற்பட்டோர் படுகாயமுற்றது பற்றியோ, தமிழக முதல்வருக்கும் தமிழகத்தின் இதர அரசியல்வாதிகளுக்கும் துளியும் கவலை இல்லை; வருத்தமும் இல்லை!

'விடுதலைப் புலிகள் தங்கள் பிடிவாதத்தைத் தளர்த்திக்கொண்டு அமைதிப் பேச்சுவார்த்தைக்கு வர வேண்டும். தனித் தமிழ் ஈழம் என்ற நியாயமற்ற கோரிக்கையைக் கைவிட வேண்டும். அவ்வாறு செய்தால், இந்திய அரசு மூலமாக இலங்கை அரசை வலியுறுத்தி, சிங்களவருக்குச் சமமான உரிமைகளைத் தமிழர்களுக்கும் வழங்கச் செய்யலாம்' என்கிற சிந்தனையும் செயல்திட்டமும் மட்டும் தமிழக முதல்வருக்கு இருந்திருக்குமேயானால், இலங்கைத் தமிழர்களுக்கு ஆதரவாக 1956ல் தி.மு.க. பொதுக்குழு நிறைவேற்றிய ஒரு தீர்மானத்தை, இன்றைக்கு மீண்டும் நிறைவேற்ற வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டிராது.

மத்திய அரசு, இலங்கைப் பிரச்னையில் தலையிட்டு இலங்கை ராணுவத்தின் படுகொலைகளை நிறுத்த வேண்டும் என்று தமிழகத்




தலைவர்கள் பலர் குரல் கொடுக்கிறார்கள். ஆனால், அப்பாவித் தமிழர்களின் படுகொலைக்கு, பிரபாகரனின் பிடிவாதமே காரணம் என்பதை மறந்துவிடுகிறார்கள்; மறைத்தும் விடுகிறார்கள். இந்திய பூமியிலும் அங்கங்கே தனி நாடுக்கான குரலும், வன்முறைப் போராட்டங்களும் மட்டுமின்றி பயங்கரவாதமும்கூட நிகழ்ந்துகொண்டுதான் இருக்கின்றன. விடுதலைப் புலிகளின் தனி ஈழப் பிடிவாதத்தை ஆதரித்தாலோ அல்லது அது குறித்து மௌனம் சாதித்தாலோ, இங்கே நம் நாட்டில் எழும் போராட்டங்களும் நியாயப்பட்டுப் போகாதா?

மாறாக, இலங்கை அரசுக்கு ராணுவ உதவி அனுப்புவதும் விபரீதம்தான் என்பதால், இவ் விஷயத்தில் பிரபாகரனின் பிடிவாதம் தளர்ந்தாலொழிய பிரச்னை தீர வழியில்லை. கருணாநிதி சொல்வதுபோல், அனைத்துத் தமிழர்களின் ரத்தத்தையும் இலங்கை மண்ணில் அபிஷேகம் செய்தாலும் அமைதி திரும்பாது.

ராஜீவ் காந்தியைப் படுகொலை செய்யவேண்டும் என்று பெரும்பான்மையான இலங்கைத் தமிழர்கள் ஒருபோதும் விரும்பியிருக்க மாட்டார்கள். பிரபாகரனின் கொடூரத்தால் அது நிகழ்ந்தது; இன்னும் பல கொடுமைகள் நிகழ்ந்தவண்ணம் இருக்கின்றன. இந்தக் கொடுமைகளை இழைப்பதால், இலங்கைத் தமிழர்களின் பாதுகாப்பை அதிகரிப்பதற்குப் பதிலாக குலைத்துக்கொண்டுதான் இருக்கின்றனர் விடுதலைப்புலிகள். தமிழர் நலன், மனித நேயம் என்பவற்றில் துளியேனும் அக்கறையிருக்குமானால், தமிழ்நாட்டு அரசியல்வாதிகள் தினம் ஒருவராக மேடை போட்டுப் பேசி, அரசியல் ஆதாயம் சேகரிக்க முயற்சிப்பதை முதலில் நிறுத்தட்டும். விடுதலைப்புலிகளின் கொடூரச் செயல்களுக்கு எதிரான தீர்மானத்தை இயற்றட்டும். தனித்தமிழ் ஈழக் கோரிக்கையைக் கைவிட்டு, ஜனநாயகப் பாதையை ஏற்று, பேச்சுவார்த்தைகள் மூலம் பிரச்னைக்குத் தீர்வுகாண புலிகளை வற்புறுத்தட்டும். ○

அஞ்சலி



# நிகரில்லா ஆர்.வி.

'ஆர்.வி. அமரராகி விட்டார்' என்னும் செய்தியால் அதிர்ந்த இதயம் இன்னும் சமனப்படவில்லை. தொண் ணூறு வயதைப் பூர்த்தி செய்த ஆர்.வி. நினைவு தெரிந்த நாளிலிருந்து நெடும் பயணம் முடியும் வரை மடிப்புக் கலை யாத தூய கதராடையில் திகழ்ந்தவர். நாட்டு விடுதலைக்காக விழைவுடன் சிறை சென்ற பேனா வீரர். அதற்கான சலுகை களைப் பெறாத சுத்தமான தியாகி!

இளம்வயதிலேயே படைப்பிலக்கிய உலகில் தடம் பதித்த ஆர்.வி.யை- ஆனந்த விகடன், சுதேசமித்திரன், கல்கி என அனைத்துப் பிரபல இதழ்களும் அங்கீகரித் தன.

'கலைமகள்' நிறுவனமோ, இவரைத் தனது ஆசிரியர் குழுவிலேயே இணைத்துக் கொண்டு அரவணைத்தது. கி.வா.ஜ. தலை மையில் கா.ஸ்ரீ.ஸ்ரீ., தி.ஜ.ர. போன்ற மேதைகளுடன் 'மஞ்சரி'யில் பணியாற்றும் நல்வாய்ப்பும் கூடியது. பின்னர், 'கண்ணன்' சிறுவர் இதழின் ஆசிரியராகி, இளைய தலைமுறையின் இணையற்ற முன்னோடியாக முத்திரை பதிக்கும் சூழ லும் உருவாயிற்று.

'அந்நாளில், ஒரே நேரத்தில் நான்கு பெரிய பத்திரிகைகள் ஆர்.வி.யின் தொடர்கதைகளை வெளியிட்டன!' என் பது, நேர்த்தியும், யதார்த்தமுமான இவ ரது எழுத்தாற்றலுக்கு எடுத்துக்காட்டு.

அணையா விளக்கு, ஆதித்தன் காதல், திரைக் குப் பின், தேன்கூடு, யுவதி, சவிதா, குங் குமச்சிமிழ் போன்ற படைப்புகளால் இவருக்கு விருதுகளும், பரிசுகளும் கிட்டின. சிறுவர் இலக்கியம் செழிக்கவே இவர் சித்தம் ஒன்றி உழைத்தார்; சிகரம் அடைந்தார்.

அறிமுக எழுத்தாளர்களைக் கண்டு பிடித்துப் புகழ் சேர்க்க, ஆர்.வி. ஆண்டு தோறும் நாவல் போட்டி நடத்துவார்; இரண்டு படைப்புகளைத் தேர்ந்தெடுத்துப் பரிசளிப்பார்.

இவர் சாதி மதங்களைக் கடந்து ஜே.எம். சாலி, மேரியண்ணா, சாருகேசி, லெமன், ரேவதி, ஏவி.எம். ஹாஜா, ஜோதிர் லதாகிரிஜா, அம்பை, தே.பார்த்தசாரதி என மிகப் பலரை உய்த்துணர்ந்து வளர்த்தெடுத் தார்.

நிறைவான பெருவாழ்வு வாழ்ந்த இந்த இலக்கியவாதியை, இன்னொருவரு டன் ஒப்பிட முடியாது! 'ஆர்.வி.க்கு இணை, ஆர்.வி.யே!' என்பதுதான் இவருக் கான தனிச்சிறப்பு. ●

**இலக்கியவீதி இனியவன்**

பூர்ணம் விசுவநாதனுடன் 20 ஆண்டுகளுக்கும் மேலாகப் பழகியவரும் சகநடிகருமான சந்துரு கூறினார் :

# அஞ்சலி



# ஆறு பேராக இருந்தாலும்...

ஒரு தடவை 'வாஷிங்டனில் திருமணம்' நாடகத்தில் நடிக்கும்போது, நான் கையில் மேக்-அப் போடாமல் இருந்ததைப் பார்த்துவிட்டு, ''முகமெல்லாம் வெள்ளையாய், கை மட்டும் கறுப்பா இருந்தா எப்படி? போய் முழுசா மேக்-அப் பண்ணிட்டு வா!'' என்றார் பூர்ணம். ''அமெச்சூர் நாடக நடிகன்தானே? அவ்வளவு தூரம் யார் கவனிக்கப் போகிறார்கள்?'' என்றேன்.

''நாம் எல்லாம் மெச்சூர் நடிகர்கள். ஒழுங்காக கைக்கும் மேக்-அப் போட்டுக் கொண்டு வா!'' என்றார் கறாராக.

''ஆடியன்ஸ் ஆறு பேராக இருந்தாலும் சரி, ஆயிரம் பேராக இருந்தாலும் சரி. நாடகத்தின் பாத்திரங்களாக வரும் அத்தனை பேரும் சிரத்தையாக நடிக்கவேண்டும்!'' என்பார். நாடகம் என்றால் உயிர் அவருக்கு.

அவருக்கு நகைச்சுவை வெகு இயல்பாக வரும். ஒரு தடவை வெளியூரில் நாடகம் போட, குழுவாக ரயிலில் போய்க் கொண்டிருந்தோம். பொழுது போவதற்காக இரவு கொஞ்ச நேரம் சீட்டாடிக் கொண்டிருந்தோம். கூத்தபிரான் எல்லாரிடமும் ஐந்து ரூபாய் வாங்கி, சீட்டு விளையாடித் தோற்றார்.

மறுநாள் காலை பூர்ணம் அவரிடம், ''இனி உங்க பேரை மாத்தி 'தோத்தபிரான்'னு வச்சுக்குங்க!'' என்று சொல்லி எல்லாரையும் சிரிக்க வைத்துவிட்டார்.

கர்நாடக இசையில் அவருக்கு நல்ல ஈடுபாடும் ரசனையும் உண்டு. நடிகை ரேவதியின் நடன அரங்கேற்றம், மாண்டலின் ஸ்ரீனிவாஸ், வீணை காயத்திரி இவர்களுடைய முதல் நிகழ்ச்சிகள், எல்லாம் அவர் தலைமையில்தான் நடந்தன. என் மகன் சிக்கில் குருசரணின் முதல் நிகழ்ச்சியும் அவர் முன்னிலையில் தான் நடக்கணும் என்று, பத்து வருடம் முன்பு, மே 1 ஆம் தேதி, அவர் வீட்டிலேயே அவனைப் பாட வைத்து, அவரை ஆசி வழங்கக் கேட்டுக் கொண்டேன். அவர் ஒரு பொன்னாடையைக் கொண்டுவந்து போர்த்தி, நூறு ரூபாய் கையில் கொடுத்து சரணை ஆசிர்வதித்தார்.

பூர்ணம், ரிட்டயர் ஆகிற வரைக்கும், எந்த நாடகத்தில் நடித்த போதும் பணமே வாங்கிக் கொண்டதில்லை!

* சந்துரு



- சாருகேசி

கிரிக்கெட்டில் பணபலத்தைப் பொறுத்தவரைக்கும் இந்தியாவே வல்லரசு. ஆனால் திறமையில் ஆஸ்திரேலியா தான் இன்றும் தன் முன்னணியைத் தக்க வைத்துக்கொண்டிருக்கிறது. கடந்த பதினைந்து வருடங்களாக எல்லா கிரிக்கெட் நாடுகளும் குட்டிக்கரணம் அடித்துப் பார்த்துவிட்டன. ஆனால் ஆஸ்திரேலியாவின் நிழலைக்கூட யாராலும் தொடமுடியவில்லை.

கடந்த இருபது ஆண்டுகளில் ஆஸ்திரேலியாவின் சரித்திரத்தை மாற்றி எழுதியவர்கள் என்று மூன்று பேரைச் சொல்லலாம். ஆலன் பார்டர், ஸ்டீவ் வாக் மற்றும் ரிக்கி பாண்டிங். கிரிக்கெட்டில் மேற்கு இந்தியத் தீவுகள் அணி அசைக்க முடியாத சக்தியாக இருந்த காலம் என்று ஒன்று உண்டு. ஆனால், அதைச் சுக்குநூறாக்கி மே.இ.தீவுகள் அணியை இருந்த இடம் தெரியாமல் செய்த பெருமையெல்லாம் ஆஸ்திரேலியாவையே சாரும். அப்பேர்ப்பட்ட பீமபலம் பொருந்திய அணியைத் தான் அடுத்த ஒரு மாத காலத்துக்கு இந்திய அணி சந்திக்கவிருக்கிறது.

மே.இ.தீவுகள் அணி போல மின்னல்வேகப் பந்து வீச்சாளர்களும், ரிச்சர்ட்ஸ் போன்ற பேட்டிங் ஐகான்களும் ஆஸ்திரேலிய அணியில் இருந்தது கிடையாது. எனினும் அவ்விதக் குறைகளையும் தாண்டி அவர்கள் உச்சத்தில் இருப்பதற்கு ஒரே காரணம் - போராட்டக் குணம். இந்த ஒரு விஷயத்தில் இந்தியாவுக்கான உதாரணங்களைத் தேடினால், கொல்கத்தா டெஸ்டில் திராவிடும் லக்ஷ்மணும் நிகழ்த்திய மீட்பு நடவடிக்கையைச் சொல்லலாம்.


ஆலன் பார்டர்

சமீபத்தில் ஆஸ்திரேலிய அணிக்கும் போர்டு பிரசிடெண்ட் லெவன் அணிக்கும் நான்குநாள் போட்டி ஒன்று நடந்தது. ஆஸ்திரேலிய அணி முதல் இன்னிங்ஸில் மளமளவென 9 விக்கெட்டுகளை இழந்து ஃபாலோ ஆன் ஆக வேண்டிய நிலைமைக்குத் தள்ளப்பட்டது. ஆனால், அப்போது தான் அற்புதம் நிகழ்த்தப்பட்டது. ஹஸ்ஸியும் கிளார்க்கும் கடைசி விக்கெட்டுக்கு கைகோத்து 100 ரன்களுக்கு மேல் குவித்து, அணியைப் படுகுழியிலிருந்து மீட்டு எடுத்தனர். இதென்ன? '99 உலகக் கோப்பை அரையிறுதி ஆட்டத்தின்போது தென் ஆப்பிரிக்காவுக்கு உறுதியாக இருந்த வெற்றியை, ஷேன் வார்னேவின் மாய ஜாலத்தால் தட்டிப் பறித்தது ஆஸ்திரேலியா.

ஒரு தவறு செய்தால் அதைத் திருப்பிச் செய்தால் அவன் தேவன் என்றாலும் ஆஸ்திரேலியாவில் விட மாட்டார்கள். பங்களாதேஷுடனான ஆட்டம் பற்றிய அணிக் கூட்டத்துக்கு சிமெண்ட்ஸ் கலந்துகொள்ள வேண்டிய அவசியம் கிடையாது. ஆனால், ஒழுங்கின்மை என்று முத்திரை குத்தி, கூட்டத்துக்கு வராத சிமெண்ட்ஸை சிறிது காலம் முடக்கி வைத்திருக்கிறது ஆஸ்திரேலியா. விளையாட்டின் முன்னால் அங்கு எல்லோரும் சமம். வாலாட்டினால் ஒட்ட நறுக்கிவிடுவார்கள்.

தனித்திறமையை வளர்த்துக் கொள்வதில் ஆஸ்திரேலியர்கள் கில்லாடிகள். ஓய்வு பெற்றபின் வலுவில்லாத அணிக்குத் தலைமை தாங்கிய ஷேர்ன் வார்னே, ஐ.பி.எல். போட்டியில் நிகழ்த்திய அற்புதங்

# ஆஸ்திரேலியா ரகசியங்கள்!

**ச.ந.கண்ணன்**

களைத்தான் எல்லோரும் கண்கூடாகப் பார்த்தோமே! இந்த வேலையைச் செய்யாவிட்டால் உயிருக்கு உத்தரவாதமில்லை என்கிற நிலை இருந்தால், எப்படி துடிப்பாகவும் வெறியோடும் பணியாற்றுவோமோ அப்படியொரு நிலைதான் ஆஸ்திரேலிய வீரர்களுக்குக் கற்றுக் கொடுக்கப்படுகிறது. வரிசையாக டக்-அவுட் ஆகிச் செல்லும் பேட்ஸ்மேன்களையோ அல்லது அசட்டையோடு ஃபீல்டிங் செய்யும் வீரர்களையோ, ஆஸ்திரேலிய அணியில் எப்போதும் பார்க்க முடியாது.

ஆஸ்திரேலியா இப்போது ஒரு மாத காலத்துக்கு முன்பே இந்தியா வந்து கூடாரம் அமைத்து, இந்தியர்களைவிடவும் தீவிரமான பயிற்சியில் ஈடுபட்டார்கள். அதன் பலன் இன்னும் சில வாரங்களில் தெரியப்போகிறது. ○

• ரிக்கி பாண்டிங்

• ஸ்டீவ் வாக்



"ஆதித் தமிழனின் கலை வடிவங்களான குகை ஓவியங்களை, கண்டுபிடிக்கும் முயற்சியாக, சுமார் பத்து ஓவியர்களைத் திரட்டி அவ்வப்போது பல்வேறு மலைப்பகுதிகளுக்குப் பயணப்பட்டு இருக்கிறோம். அதில் ஒரு மலைப்பகுதி பற்றிய அனுபவம்தான் இது'' என்கிறார் ஓவியர் K.T.காந்திராஜன்.

''தமிழகத்தின் ஆனைமலைத் தொடரில் பயணித்தால், மலைமேல் காடம்பாறை பகுதி வரும். அங்கிருந்து தெற்கில் இன்னும் மலை உச்சி நோக்கி, மூன்றரை கிலோமீட்டர் வனத்துக்குள் ஒற்றையடிப்பாதையில் நடந்து சென்றால் மாவுடைப்பு, காடுபட்டி போன்ற மலைக்கிராமங்களை அடைந்துவிடலாம். மலைக்கிராமங்கள் கட்டுப்பாடானவை. வெளியாட்கள் சுலபமாக நுழைய முடியாது. கிராமத் தலைவரின் அனுமதியும் ஆதரவும் வேண்டும். பல பகுதிகளை வனம் சூழ்ந்துள்ளதால் வனத்துறையின் அனுமதியும் தேவைப்படலாம்.

மலை உச்சியில் வசிப்பவர்கள் முதுவர்கள். அதற்குக் கீழே புலையர், அதற்குக் கீழ் பகுதியில் காடர், மலைசர், அடிவாரப் பகுதியில் பளியர் மற்றும் மலைமலைசர் என மலையின் உயரத்தை நான்கு விதமாகப் பிரித்து வெவ்வேறு இனமக்கள்




# அறியப்படாத

வசிக்கின்றனர். கிட்டத்தட்ட இந்த உயரப் படிநிலைகள் நகரத்து சாதியப் படிநிலையோடு ஒத்துப் போவது ஆச்சரியமாயிருக்கிறது.

புலையர் மற்றும் காடர் இன மக்கள் இயற்கை சீற்றம் மற்றும் நோய்த்தொற்று வந்தால், உடனே கூண்டோடு இடத்தைக் காலி செய்து உச்சி நோக்கி இடம் பெயர்ந்தால், உயரத்திலிருக்கும் முதுவர்கள் கட்டிய வீடு உட்பட எல்லாவற்றையும் அப்படியே விட்டுவிட்டு இன்னும் உச்சி நோக்கி கூண்டோடு இடம் பெயர்ந்து விடுவார்கள். முதுவர்கள் முழு சைவம். பிற இனத்தவர்கள் அசைவம். மற்றவர்கள் பயன்படுத்திய நிலத்தை, நீரைக்கூட முதுவர்கள் தொடுவதில்லையாம். நகரவாசி







# மலைல வாழ்வு!



களை அவர்கள் 'பாண்டியர்' என அழைக்கிறார்கள்.

ஒரு மலைக் கிராமத்தில் எல்லோர் வீட்டிலும் உணவு தயாரித்து, வீட்டு வெளித் திண்ணையில் வைத்து விடுகிறார்கள். இப்போது எல்லோர் வீட்டுத் திண்ணையிலும் உணவு. முதலில் எல்லோர் வீட்டுக் குழந்தைகளும் கூட்டாகச் சேர்ந்து ஒவ்வொரு திண்ணைக்கும் சென்று பிடித்ததை எடுத்துச் சாப்பிடுவார்கள். இவ்வாறாக எல்லோர் வீட்டுத் திண்ணைகளை நோக்கி சமத்துவ உணவு யாத்திரை நடத்திப் பசியாறுகிறார்கள். விருந்தோம்பலைப் பற்றியும் பகுத்துண்டு பல்லுயிர் ஓம்பல் பற்றியும் படிக்காத இவர்களுக்கு, வாழ்க்கை செயல்வழிப் பாடமாக அமைந்து இருக்கிறது.



* மூத்த குடி

பல மலைக் கிராமங்களில் மின்சாரம் இல்லை. அழுதுவடியும் டி.வி தொடர்கள் இல்லை. பண்பாட்டைக் கெடுக்கும் சேனல்கள் இல்லை. மலைவாழ் மக்களுக்கு எல்லை தெய்வம் மீது அதீத பயம். மூங்கில் காடுகள் அதிகம் உள்ளதால் மூங்கில் கழிகளை (தட்டி போல்) இரட்டைச் சுவர் போல கட்டி நடுவில் மண்ணை வைத்து நிரப்பிதான் வீட்டுச் சுவர் கட்டப்படுகிறது. இலேசாய் சுரக்கும் சுனை நீர்தான் குடிநீர். தேன் எடுத்தல், கேழ்வரகு பயிரிடுதல், தைல புற்கள் அறுத்தல் இதுதான் தொழில். அரிசி சாதம் எப்போதாவது. இனக்கலப்பு, காதல், மூச்! அவ்வளவுதான்.

ஒரு சிறுவனைக் கேட்டேன், 'எப்படி பொழுது போகும்? என்ன விளையாடுவீங்க?'ன்னு. 'யானையைச் சீண்டிப் பார்ப்போம். யானைமேல படாதபடி (அது சாமியாம்) அதுங்க இருக்கிற எடத்தப் பார்த்துக் கல்லெறிவோம். அது எங்களைத் துரத்தும். நாங்க ஓடுவோம்... அப்படித்தான்...' என்றான் அசால்டாக. 'பொட்டப் புள்ளைங்க விளையாட கிளி பிடிச்சுத் தருவோம்; வீட்ல வளத்து விளையாட! (பொம்மை வைத்து விளையாடுவது போல)' என்றும் டிப்ஸ் தந்தான்.

சமீப காலம் வரை பேருந்தைப் பார்க்காத இம்மக்களுக்கு, நகர நவீன வாழ்க்கையின் ருசி தெரியத் துவங்கிவிட்டது. மாசம் ஐந்நூறு ரூபாய் சம்பளத்துக்கு மலையை விட்டு இறங்கி வர ஆரம்பித்திருக்கின்றனர்.

எப்படி சுதந்திரப் போராட்டக் காலத்தில் காந்தியவாதிகளுக்கும் பிரிட்டிஷ்காரர்களுக்கும் போர் இருந்ததோ, அப்படித்தான் பழங்குடிக்கும் ஃபாரெஸ்ட் ஆஃபீஸர்களுக்குமான உறவு. இந்த மலை எங்கள் சொத்து. இந்த வனத்தில் சகல மூலைக்கும் சென்றுவர எங்களுக்குச் சுதந்திரம் உண்டு என்பது பழங்குடி வாதம். வனத்துறை பல பகுதிகளுக்குத் தடை விதித்து உள்ளதுதான் முக்கியப் பிரச்னை. அறியப்படாத இந்த மக்களும் மக்களின் மலை வாழ்வும் அரிய அனுபவம். ஆதித் தமிழனின் உயிர்த்துடிப்பு எங்கு ஒளிந்துள்ளது என்பதை அறிய முடிந்தது. இயற்கைக் காட்சி ஏனோ எங்களுக்கு இந்த முறை இரண்டாம் பட்சமாகிவிட்டது'' என்று கூறி முடித்தார் காந்திராஜன்.

**– சசி**

புகைப்படங்கள்:
**காந்திராஜன்**

**த**ன்னைப் பற்றிய விவரங்களே தெரியாத ஒருவனுக்கு, தான் யாரென்பது தெரியவரும்போது நிகழ்ந்து முடியும் பிரளயம்தான் கதை. கதையின் நாயகன் அர்ஜுனுக்குத்தான் இந்தப் பிரச்னை.

ஓர் அரசியல் கட்சியின் நேர்மையான தொண்டனாகப் படம் முழுக்கப் பரிமளிக்கிறார் அர்ஜுன். தனக்குக் கிடைக்கும் கட்சித் தலைவர் பதவியை வேண்டாம் என்பதும், அது தவறானவர்கள் கையில் கிடைத்துவிடக் கூடாது எனப் போராடும்போதும் அர்ஜுன் எடுக்கும் ஆக்ஷன் அவதாரம், ஆரவாரம். காமெடியிலும் கலகலக்க வைக்கிறார். மேக்கப்பில் இன்னும் கொஞ்சம் கவனம் செலுத்தியிருக்கலாம். குளோஸ்-அப் காட்சிகளில் தொங்கிப் போன முகமாகத் தெரிவது பெரிய குறை.

சமையல் மாஸ்டராக விவேக். நீண்ட நாட்களுக்குப் பிறகு ரசிகர்களுக்குத் தடபுடல் விருந்து வைத்திருக்கிறார். கல்யாண வீட்டுச் சமையல் பொருட்களில் கமிஷன் அடித்துக்கொண்டு மாட்டும்போது, திரை முழுக்க 'கலகல' திருவிழா. ஹீரோயின் கமா புதுமுகம். சராசரி கோடம்பாக்கத்து வரவு. கஜாலா, குடும்பத்துக் குத்துவிளக்கு. தமிழ் சினிமாவுக்கு அமைதியான வில்லனாக 'அமித் தாவனே' அட்டகாசமான வரவு. தந்தையைக் கொல்வது முதல் அர்ஜுனைக் கொல்வது வரை நிழலில் கெட்டவனாக வெளிச்சத்தில் நல்லவனாக கன்னிங் கலவை.

படத்தில் எல்லாவற்றையும் மிஞ்சி விடுவது க்ளைமாக்ஸ் ஃபைட்தான். பின்னணி இசையில் மட்டும் கவனம் ஈர்க்கிறார் இமான். கதையின் வேகத்துக்கு ஈடுகொடுக்க முடியாமல் திணறும் திரைக்கதை மெகா மைனஸ். எப்போதும் போல இதுவும் சகலவிதமான மசாலாக்களோடு வந்திருக்கும் இயக்குநர் ஏ. வெங்கடேஷின் கூட்டுப் பொரியல்தான். காரம் சற்றே அதிகம்.

துரை - ஈரம் கசியும் பாறை!

**- கண்மணி**












# ஸ்ரீ ஐஸ்வர்யா சாரீஸின் ஹரன்சிகா கலெக்ஷன்ஸ்!



**இந்த நவராத்திரி - தீபாவளிக்கு**
**ஸ்ரீ ஐஸ்வர்யாவுல என்ன ஸ்பெஷல்?**
**ஆயிரம் இருக்கு எடுத்துச் சொல்ல...**
**ஆனா சில போதாதா உங்கள் உள்ளம் துள்ள?**

**செப்-28 முதல் அக்-26 வரை பண்டிகைக்கால Special விற்பனை!**

**upto 25% Discount**

ராணி மெஜந்தாவுல, ஜர்தோஸி, குந்தன் வேலைப்பாடு செய்யப்பட்ட இந்தப் புடவையோட ஸ்பெஷாலிடி என்னத் தெரியுமா? அதனுடைய அழகான ஸ்காலப் work... அப்புறம் அட்டாச்ட் Designer Blouses! ஷேடே சொல்ல முடியாத மாதிரி, அத்தனை நிறங்களும் கிடைக்கின்றன. ஏலக்காய் க்ரீன் எடுக்கலாம்னா, டர்காய்ஸ் ப்ளூ கொஞ்சும், மெட்டாலிக் க்ரே எடுக்கலாம்னா, மெரூன் அப்படி மினுக்கும். உம்...! எதை எடுக்க? எதைவிட.... உங்க மனசு தான் படாத பாடு படும்!



ஹரன்சிகாவோட Double Delight இது! Attached Border, போல்கோ டாட்ஸும் ஒரு கவர்ச்சி என்றால், Double Blouse இன்னொரு கவர்ச்சி! Attached ப்ளவுஸுடன், இன்னொரு செமி - சில்க் ப்ளவுஸும் தருகிறார்கள். உங்கள் உடல் வாகுக்கு ஏற்ப தைத்து அணியலாம். பளபளப்பான ஆலிவ் க்ரீனுக்கு, மெரூன் போல்கோ டாட்ஸ் எவ்வளவு எடுப்பா இருக்கு பாருங்க! "எங்கே வாங்கினே? எங்கே வாங்கினே?"னு துளைச்சுடுவாங்க!



## சொந்தத் தறியில் உருவான சிங்கார பந்தங்கள்

ஹரன்சிகாவின் த்ரீ இன் ஒன் புடவை இது! ஜூட் வேலைப்பாடு கொண்ட Soft பட்டுபுடவை இது! அரச இலைகள் அழகாய் உதிர, தங்க மாங்காய்கள் தக தக என அணிவகுத்து... பார்டரின் பளபளப்பைப் பார்த்தீங்களா? இதுலேயே, இலந்தளிர், நெளி டிஸைன், ஜியோமெட்ரிகல் டிஸைன்னு ஏகப்பட்டது இருக்கு! இன்னொரு டிஸைனும் ஆளை அசத்துது... உடம்பெல்லாம் நெளி டிஸைன். அப்படியே அசத்தல் காண்ட்ராஸ்ட்! ஒரு டஜன் டிஸைன்களில், கற்பனையே செய்ய முடியாத நிறங்களில் கிடைக்குதே!

ஹன்சிகாவின் சூப்பர் சில்க் காட்டன் ஸ்பெஷல் இது. செல்ஃப் செக், கோர்வை புடவையில்... அந்த முந்தானை தான் செம ஹைலைட்! பல்லுவை விரிச்சா... அதுல பெரிய சக்கிள் டிசைன். பெரிய தஞ்சாவூர் தட்டில், தங்க நகைகள் அள்ளி வைச்ச மாதிரி, சும்மா தகதகன்னு அப்படியொரு வேலைப்பாடு!
சீக்வென்ஸ் + மணிகள் கொண்டு அழகாய் புள்ளி வெச்சு, பண்டைக்கால இழைக்கோலமே போட்டிருக்காங்க... புடவை முழுக்க... அடேயப்பா! என்ன ஒரு கற்பனை... எத்தனை அழகுணர்ச்சி... ஹேட்ஸ் ஆஃப் ஐஸ்வர்யா!
இதுலயும் ஏகப்பட்ட கலர்ஸ், எக்கச்சக்க டிசைன்ஸ்... சொல்லவே தேவையில்லை தானே?



எம்ப்ராய்டரியும், பிரிண்ட்ஸும் நூதனமோ நூதனம் இதுல ஹாஃப் சக்கிள் டிசைன்ஸ் ஒன்றை புதுசா போட்டிருக்காங்க பாருங்க... அதுலே புதுமைன்னா அதுக்குப் போட்டிருக்கிற டிசைனர் ப்ளவுஸ் அம்மாடியோவ் நெக்கும் ஸ்லீவும் அவங்களே டிசைன் பண்ணிக் கொடுக்கறாங்க... அப்புறமென்ன. மேட்சா தைச்சுப் போட்டுக்க வேண்டியதுதான். கல்லூரிப் போற பொண்ணுங்களா... அள்ளிக்கிட்டுப் போங்க கண்ணுங்களா... ஹன்சிகாவின் ரசனை மிகுந்த ராக்கொடி டிசைன் இது! முதன் முதலா, டெம்பிள் ஜுவல்லரியை புடவையில் கொண்டு வந்திருக்காங்க. சில்க் காட்டனில், பாவஞ்சி பார்டர் வைத்து, குந்தன் மணிகளால், புடவை முழுக்க அங்குல அங்குலமாக அழகாய் இழைத்திருக்கிறார்கள்... பழமையும் புதுமையும் கை குலுக்கும் அழகைக் காண ஆயிரம் கண் போதாது. விவரிக்க ஆயிரம் வார்த்தை போதாது.

ப்யூர் சில்கில், ஆரி work செய்த புடவையின் ரிச் லுக்கைப் பார்த்தீங்களா? யார் கட்டினாலும் இருபது வயசு குறைஞ்சிடும் மாயாஜால் புடவை இது. காப்பர் சல்ஃபேட் ப்ளூ, பர்கண்டி, மலாய் எல்லோ, லோட்டஸ் ரெட் என எத்தனை வண்ணங்கள்? எத்தனை நுணுக்கமான வேலைப்பாடுகள்? உடலோடு ஒட்டி உறவாட ஹன்சிகாதான் பெஸ்ட்! இது தவிர, லைட்வெயிட் பாலிகாட்டன், செட்டிநாடு, கோட்டா, காஞ்சி காட்டன், டெய்லிவேர் காட்டன், கடிதார் மெட்டீரியல்ஸ் என எண்ணற்ற ரகங்கள் கொட்டிக் கிடக்கு... ஒருமுறை வந்தா... மறுபடி மறுபடி வருவீங்க.. வந்துக்கிட்டே இருப்பீங்க...

**சில்க் காட்டனின் சிங்கார சிகரம் ஸ்ரீ ஐஸ்வர்யா சாரிஸ்தான்!**

**Give life to handloom!**

## SRI AISHWARYA SAREES

19, Arcot Street, T. Nagar, Chennai - 17
(Near M.G.R. Memorial House)
✆ 4260 4447, 98409 83999,
94441 76372

- Embroidery Undertaken
- Tailoring Attached

* குறிப்பிட்ட ரகங்களுக்கு மட்டும்

'நடந்து கழியணும் வழி' என்பது போல் சண்முகேசுவரி நடந்து கொண்டிருந்தாள். தியாகுவின் பட்டறை இன்னும் வரவில்லை. இடையில் நாலைந்து பேரிடம் கேட்டாயிற்று. ''என்ன லேத் பட்டறையா?'' என்று கேட்பவர்கள், சாதாரணமாகத்தான் கேட்கிறார்கள். ''யாரைப் பாக்கணும்?'' என்று கேட்பவர்களுக்கு அவள் பதிலேதும் சொல்லவில்லை. கசப்பாய் புன்முறுவலை உதிர்க்க வேண்டியிருந்தது. வாகனச் சப்தங்களிடையே கேள்வி கேட்பதும் பதில் சொல்வதும் அசாதாரணமானவை.

சென்றதரம் பார்த்துவிட்டுத் திரும்புகையில் அசௌகரியமாக இருந்தது. ''நான் இதை எதிர்பார்க்கலே.''

''உள்ளூர கூடவா..?''

''இல்லதான்... ரெண்டு வருஷமா பழகறோம். இந்த மாதிரி கைக்குலுக்கினது நடந்ததில்லே. சட்டுன்னு வரட்டுமான்னு கேட்டமாதிரி கையைக் குலுக்கிட்டீங்க.''

''சாதாரண விஷயந்தானே. தனிமையான எடம்ன்னா பரவாயில்லே. பொது இடம். லைப்ரரி.''

''இதை நான் எதிர்பார்க்கலே.''

''ரொம்பவும் சிக்கலா எடுத்துக்காதீங்க...''

''அப்படியில்லே... தோணுச்சு. அத்து மீறல்ன்னு இல்லே. இது சட்டுன்னு உங்களை மீறி... முத்தம்ன்னு போயிறக் கூடாதுன்னு...''

''உள்ளூர விரும்பறீங்களா அதை...?''

''அப்படி அர்த்தம் இல்லே...''

தியாகுவின் பட்டறையென்றால் சம்மட்டி அடிக்கும் சப்தங்கள் கேட்குமா? கனத்த இரும்பைத் துண்டிக்கவும், அறுக்கவும் பயன்படுத்தும் இயந்திரங்களின் ராட்சதத்தனம் பயமுறுத்துமா? சென்ற தரம் வந்திருந்தபோது சோர்ந்து போயிருந்தான். ''டாலர் சிட்டி, வந்தாரை வாழ வைக்கும் பூமி, எங்க பார்த்தாலும் வேலை காலியாயிருக்குன்னு போர்டு தொங்கற ஊருன்னு சொல்றாங்க. விருந்தோம்பலுக்குப் பேர் போன ஊருன்னு சொல்றாங்க. இப்படியிருக்கே...''

''எப்படியிருக்கு...?''

''வெளியூர்க்காரன்னாவே வெறுப்பா பார்க்கறாங்க. வெளியூர்க்காரங்க வந்து இங்க இவங்க வேலையெல்லாம் பிடுங்கிட்டாப்புலே. எல்லா எடத்திலேயும் ஒரு அவமரியாதைதான். நேத்து பஸ்ல உக்கார்ற சீட்டுக்கு ஒரு சின்ன பிரச்னை. உள்ளூர்க்காரனுங்களுக்கு எடம் குடுக்க மாட்டீங்களோ... வெளியூர்க்காரன்களுக்கு அப்பிடியென்னன்னு. பப்ளிக் பைப்லே தண்ணி பிடிக்கப் போனா இதுதான். மளிகைக் கடைன்னா கூட இதுதான். வெளியூர் தானே. சம்பாதிக்கத்தானே வந்தே. கேட்டதைக் குடுன்னு பேச்சு.''

# அங்கியன்

''இது எல்லா ஊர்க்குந்தான்.''

''இல்லே... இந்த ஊர்ல இப்போ அதிகமாயிருச்சு. வெளியூர்க்காரனை வெறுக்கறாங்க.''

பனியன் கம்பெனியில் சேர்ந்திருக்கலாம் என்று தியாகு சொல்வான் : ''பனியன் கம்பெனின்னா ஆயிரக்கணக்கான பேரு வேலை செய்யற எடம். அங்கேயும் இப்போ வெளியூர் உள்ளூர்ன்னு ஜாதிப்பிரிவு பெரிசா போயிருச்சுன்னு சொல்றாங்க. வயசு வித்தியாசம் இல்லாம



பழகறவங்க. வெளியூர் ஜாதின்னு ஒண்ணை உண்டுபண்ணிட்டாங்க.''

அவர்களுக்கு இடையில் நாலைந்து வயது வித்தியாசம் இருக்கும். சண்முகேசு வரிக்கு அவனைவிட வயது அதிகம். அந்த முதுமை சட்டென அவனின் வெளுத்த முகத்தில் தட்டுப்பட்டுவிடும்.

''வயசைப் பார்த்தா பழகிட்டிருக்கோம், பேசிட்டிருக்கோம்'' என்பான் தியாகு.

பட்டறையென்ற குறிப்பு அதன் முகப்பிலேயே தென்பட்டது. இரும்பை உருக்கி வெவ்வேறு வடிவங்களில் போட்டதுபோல கிடந்தன. ஒருவகை அழுக்குதான் வாசலில் இருந்து உள் முகப்பு வரை ஒட்டிக் கிடந்தது. உள்ளேயிருந்து வந்தவர் குதூகலமாய் முகத்தில் சிரிப்பை வரவழைத்திருந்தார். ''ரொம்பவும் தேங்க்ஸ் அண்ணா...'' அவர்களுக்குப் பின்னால் இருந்தவர்கள் ஒருவர் மாற்றி ஒருவர் திரும்பத் திரும்பச் சொன்னார்கள். ''இந்தத் தரம் வெறும் பொங்கல் வெச்சதுதான். அடுத்த தரம் கெடா வெட்டு இருக்கும். எல்லார்க்கும் அழைப்பு இருக்கும்.''

**சுப்ரபாரதிமணியன்**

''கண்டிப்பா வர்றோம் அண்ணா'' பின்னால் இருந்தவர்கள் ஒவ்வொருவராகச் சொன்னார்கள். அதில் தியாகுவின் குரல் இல்லை. பதற்றமாயிருந்தது அவளுக்கு.

''தியாகு இருக்காங்களா?'' எல்லோரின் பார்வையும் அவள் மீதிருந்தது. ஒருவித அடர்த்தியான நீலச் சட்டையை எல்லோரும் அணிந்திருந்தார்கள். சட்டையின் அடர்த்தியை மீறி வேத் பட்டறை அழுக்கு, அவர்களின் உடம்பிலும் முகங்களிலும் அப்பியிருந்தது.

''தியாகு உன்னைத் தேடி யாரோ வந்திருக்காங்க. உங்க அக்காவோ, பாட்டியோ...''



இதை ஒருவன் சொல்ல, மற்றவர்களிடமிருந்து சிரிப்பொலி கிளம்பியது. அவள் முகத்தைத் தாழ்த்திக் கொண்டாள். தலை நிமிர மறுத்தது. கண்கள் கலங்குவதாகயிருந்தன. எதிரில் நிற்பவரைப் பார்க்கக்கூட திராணியற்றது போல நின்றிருந்தாள்.

''எப்படியிருக்கிங்க... என்ன இவ்வளவு தூரம்?''

''உம்... நாலஞ்சு நாளா காணமேன்னுதான்...''

''உடம்பு சுகமில்லை. இன்னைக்கு வந்து பார்க்கணும்ன்னு இருந்தேன்.'' அவள் இறுகிய முகத்தில் இருந்த புன்னகையை மறைத்துக் கொண்டு பார்த்தாள். சற்றே இடுங்கியிருந்தது அவன் முகம். சவரம் செய்யப்படாத முகம்.

''பக்கமிருக்கற டீக்கடைக்குப் போயிடலாம்...'' அவள் எதுவும் பேசாமல் நடந்தாள். முகம் இருளடைந்து அவனின் நீலநிறச் சட்டையாகியது. கண்கள் கலங்கின. பட்டறை உள்ளிருந்து வந்த குரல்கள் எதிரொலித்தபடியிருந்தன இன்னும்.

''புரியுது. இவனுக எப்பவுமே இப்படித்தான்.. யாரைக் காயப்படுத்தறோம்ன்னு தெரியாமே பண்ணுவானுக.''

''எவ்வளவு மோசமா கமெண்ட் அடிக்கறாங்க...?''

''ஒரு பொண்ணு என்னைப் பார்க்க வர்றது அவங்களுக்குப் பொறாமை. அப்புறம் அடிப்படையில நான் வெளியூர்க்காரன். அதுதான்... உள்ளூர்க்காரன் ஒருத்தன் வந்து போனானே கவனிச்சிங்களா? அண்ணா, அண்ணாச்சின்னு ஒரே குலாவல் தான். என்னைப் பார்க்க வந்ததுக்காக அந்த கமெண்ட்.''

*''மன்னா, போருக்கு புறப்பட்ட உங்கள் கையில் கத்தி இல்லையே?''*

*''காலில் உத்தி இருக்கிறது அமைச்சரே, காலில் பாரும் 'ஸ்கேட்டிங்' ரோலரை!''*

**- வெ. சீதாராமன்**



# ரீடர்ஸ் கார்னர்

பாலக்காடு ஜில்லாவில் செர்புலி சேரி என்ற இடத்தில் இருந்து இரண்டு கிலோ மீட்டர் தூரத்தில் உள்ள கிராமம் காரல்மன்னா. இந்தக் கிராமத்தில் உள்ளதுதான் ஆயிரம் ஆண்டுகள் பழைமைவாய்ந்த திருமுல்லப்புள்ளி மஹாதேவ க்ஷேத்திரம்.

தன் அனுமதியின்றி தட்சயாகத்துக்குச் சென்ற மனைவி பார்வதிக்கு ஏற்பட்ட அவமானத்தினால், கோபங் கொண்ட சிவபெருமானின் திருவுருவம், இக்கோயிலின் மூல பிரதிஷ்டையாகும்.

எந்தக் கோயிலிலும் இல்லாத சிறப்பு இந்தக் கோயிலில் உள்ளது. இங்குள்ள மடப்பள்ளி அடுப்பில் எவ்வளவு சமையல் செய்தாலும் காலையில் ஒரு கை மண் அளவுதான் சாம்பல் இருக்கும். ராத்திரி நேரத்தில் சிவபூதகணங்கள் விளையாடி, மிச்சம் ஒரு கைப்பிடி சாம்பல்தான் வைத்திருக்குமாம்.

இந்தச் சாம்பல்தான் இக்கோயில் பிரசாதம். இந்தப் பிரசாதத்தைத் தொழில் ஸ்தானத்தில் கொண்டு வைத்தால், தொழில் வளர்ச்சியடையும் என்பதும், மாறாத வியாதிகளும் மாறும் என்பதும் இக்கோயிலின் சிறப்பாகும்.

- தகவல் : ரகுகுமார்

ஃபிளாஸ்க்குடன் வந்தவன் தியாகுவைப் பார்த்தான். சண்முகேசுவரியைப் பார்த்துப் புன்னகைத்தான். ''ஸாரிங்க. அந்த மடப்பசங்க அப்படித்தான்'' அவன் ஃபிளாஸ்க்குடன் நகர்ந்து விட்டிருந்தான். ''இவனும் என்னைப் போல வெளியூர்க்காரன். அதுதான் அனுதாபப்படறான்...''

தேநீர்க் கடை கூட்டமில்லாமல் இருந்தது. வயதான ஒருவர் கண்களைத் தாழ்த்தி, தேநீர்த் துளிகளால் நைந்து போயிருந்த செய்தித்தாளில் மூழ்கியிருந்தார்.

''சரி, நான் கிளம்பறேன். உடம்பைப் பார்த்துக்கங்க...'' சண்முகேசுவரி அவனின் வலதுகையைப் பிடித்துக் குலுக்கினாள். அதிர்ந்து போனவன் போல அவளின் வெளுத்த முகத்தைப் பார்த்தான்.

''என்ன கை குடுத்தது அதிர்ச்சியா போச்சா...?''

''இல்லே...''

''என்னாலே நீங்களும்தான் காயப் பட்டிருப்பீங்க. அதுக்கு மருந்தா ஆறுதலா முத்தம் கூட குடுக்கலாம்'' என்றாள். ●


* ஜான் செல்லையா




# செம்மை

**த**மிழகத்தில் பிற மாவட்டங்களில் குறுவைப் பட்டம். தூத்துக்குடி மாவட்டத்தில் அதுவே முன்கார் பட்டம். அதில் ஒரு ஹெக்டேருக்கு சராசரி மகசூல் ஏழு டன் நெல்தான். ஆனால் ஆழ்வார்திருநகரி அருகே குருகாட்டூர் கிராம விவசாயி ஜான் செல்லையா, முன்கார் பட்டத்தில் ஒரு ஹெக்டேருக்கு 10.400 டன் நெல் மகசூல் கண்டு சாதனை செய்துள்ளார்.

தூத்துக்குடி மாவட்டத்தின் பாசனப் பகுதி, தாமிரபரணி நதியின் வடிநிலப் பிரதேசமாகும். அந்த வடிநிலப் பகுதியில் வந்து தங்குகின்ற வண்டல் மண், அப்பகுதி விவசாயிகளுக்கு அருங்கொடையாக இருந்து வருகிறது!

''மிகச் சிறந்த மகசூல் என்பது தரமான விதை நெல்லிலிருந்துதான் துவங்குகிறது. செம்மை நெல் சாகுபடிக்கு, தரமான விதையும், தீவிரப் பயிற்சியும் தொடர் கண்காணிப்பும் அளித்தோம்'' என்கிறார் தென்திருப்பேரை வேளாண் துறை அலுவலர் இசக்கித் தங்கம்.


* பாரதி


* இசக்கித் தங்கம்

''**எ**ங்கள் வட்டாரத்தில் முன்கார் பட்டம், உளுந்து சாகுபடி, பிசானம் பட்டம் என மூன்று சாகுபடி செய்யப்படுகிறது. இந்த

மூன்றிலுமே மகசூலுக்குப் பின் வயலில் தங்கும் பயிர்களை அப்படியே மடித்துப் போட்டு உழவு ஓட்டி விடுவார்கள். உதாரணமாக, உளுந்து பயிரில் அதன் விளைந்த கொத்துக்களை மட்டும் பறித்துவிட்டு செடியை வயலிலேயே விட்டு விடுவார் கள். தண்ணீர் பாய்ச்சி அந்தச் செடிகளை வயலிலேயே மடக்கி



# சாகுபடி

உழுதுவிடுவார்கள்.

அப்போது அதன் வேர் முடிச்சுகளில் தங்கியிருக்கும் உயிர்ச்சத்துகள் அந்த வயலுக்கே அடியுரமாக ஆகிவிடுகிறது. தமிழ்நாட்டில் பிற மாவட்டங்களில் இப்படிச் செய்வதில்லை!'' எனக் கூறுகிறார் தென்திருப்பேரை வேளாண்மை உதவி இயக்குநர் பாரதி.

ஆழ்வார்திருநகரியைச் சுற்றிலுமுள்ள கிராமப் பகுதி விவசாயிகளுக்கு, செம்மை நெல் சாகுபடி, 'செழுமையான' சாகுபடியாக விளங்கி வருகிறது. செலவும் குறைவு, மகசூலும் அதிகம். ஆனால், இதற்கு நடவு நட கூலியாட்கள் கிடைப்பதுதான் மிகவும் கஷ்டமாக உள்ளதெனக் கூறுகின்றனர்.

அதென்ன செம்மை நெல் சாகுபடி?

சாதாரண சாகுபடிக்கு முப்பது கிலோ விதை நெல் தேவை என்றால், இந்த செம்மை சாகுபடிக்கு மூன்று கிலோ போதும்.

''அம்பது வருச அனுபவ விவசாயி நானு. இந்த முன்கார் பட்டத்துல என்னோட வயல்ல நான்கு ஹெக்டேர் சாதாரண நெல் சாகுபடியும், ஒரு ஹெக்டேர்ல மட்டும் செம்மை நெல் சாகுபடியும் பண்ணியிருந்தேன். அறுவடை முடிஞ்சிருச்சு. சாதாரண நெல் சாகுபடியில ஒரு ஹெக்டேருக்கு ஏழு டன் நெல் மகசூல் கண்டது. செம்மை நெல் சாகுபடியில ஒரு ஹெக்டேருக்கு 10.400 டன் நெல் மகசூல் கண்டது. முன்கார் பட்டத்துல வயல்ல காய்ச்சலும் பாய்ச்சலுமா தண்ணீர் விடுவோம். செம்மை நெல் சாகுபடியில மொத்த செலவுகள்ல ஒரு ஹெக்டேருக்கு மூவாயிரம் ரூபாய் குறைவாகத்தான் செலவாகும். இதுவும் ஒரு வகையில் லாபந்தானே! அடுத்தமுறை என்னோட எல்லா வயல்லயும் செம்மை நெல் சாகுபடிதான்'' என்கிறார் ஜான்செல்லையா.

கட்டுரை : **ஸ்ரீரங்கம் திருநாவு**

படங்கள் : **லெக்ஷ்மணன்**

# பழுத்த இலைகள்

பன்னீர் மரங்கள் இரண்டு
பழுக்கத் துவங்கிய மாமரமொன்று
எங்கள் வீட்டுத்
தோட்டத்தில் உண்டு.
தோட்டத்தில் வளர்க்க
பூச்செடிகள் விருப்பம்
அப்பாவின் விருப்பம்
புதிதாய் ஒரு ரோஜாச் செடி
பதியன் போட்டிருப்பதாய்
குதியாட்டம் போட்டான் தம்பி.
தம்பி ஒருமுறை
அம்மா ஒருமுறை
தண்ணீர் ஊற்றி வர
அப்பா சென்று ஒருமுறை
அன்பை ஊற்றி வருவார்.
மலரும் முன்பே
ரோஜாவின் புராணம்
மணம் வீசத் துவங்கியது
வீடு முழுவதும்.
ஒருநாள் காலை
புழக்கடைப் பக்கம்
புழங்கியபோது கண்டேன்,
வளர்ந்து விட்டிருந்த செடியில்
குழந்தையின் சிரிப்பாக
இளஞ்சிவப்பு ரோஜா.
பல நாட்கள்
என் தோட்டத்தில்
வளர்ந்து வந்த செடியில்
பழுத்த இலைகளும்
உதிர்ந்திருக்கக் கூடும்
பார்த்ததில்லை நான்
அப்போது!

• கார்த்திகா

# அருள்வாக்கு

உண்மையான கல்வி என்பது ஆத்மஞானம் அடைய உதவுவதேயாகும். ஆத்மஞானத்தாலேயே மக்கள் அமரத்துவம் அடைகிறார்கள். எதற்கு மேலாக ஒரு பயன் உலகில் இல்லையோ அந்தப் பயனை உண்மைக் கல்வி அளிக்கிறது. மற்றவிதமான கல்விப் பயிற்சிகளெல்லாம் உலகப் பயன்களைத்தான் அளிக்கின்றன. ஆனாலும் அவையும் படிப்படியாகப் பரமாத்மாவைச் சேர உபயோகப்படலாம். உலகப் பயன் என்பது பொதுவாகப் பொருள் திரட்டுவதையே குறிக்கின்றது. பொருளும் கூடப் பலவித தருமங்களைச் செய்யப் பயன்படுகிறது. எனவே லௌகிக தருமங்களும் பிரம்ம ஞானத்துக்குச் சாதனமாகின்றன. 'தனக்கு விதிக்கப்பட்ட தர்மங்களைச் சரிவர நடத்துவதாலும், தவத்தினாலும், இறைவனை வணங்கி வழிபடுவதாலும் ஒருவன் ஆத்மஞானத்தை அடைகிறான்' என ஆதி ஆசாரியர்கள் கூறியுள்ளார்கள்.

நமது மக்கள் விஞ்ஞானத்தைப் பயில்வதில் மட்டுமின்றி வாழ்முறையிலும்கூட வெளிநாட்டாரது முறைகளையே பின்பற்றி வருகின்றனர். இதனால் மக்களுக்கு இந்த உலகத்தின் சாமானிய இன்பத்தையும் மறு உலகத்தின் பேரின்ப வழியையும் அடையத் தடை ஏற்படுகிறதென்பது தெளிவு. ஆஸ்திகப் பரம்பரையில் தோன்றிய நமது குழந்தைகளுக்கு சிறு வயது முதலே நமது பண்புக்குரிய தருமம், ஒழுக்கம், பக்தி, ஞானம் முதலியவற்றைக் கடைப்பிடித்து ஒழுகுவதற்கு அநுகூலமான கல்வியைப் போதிக்க வேண்டியதே நம் முதற் கடமை.

– ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய சுவாமிகள்



**கே.பி.ஜனார்த்தனன்**

## போட்டிக் கதை-9

# ஒரு குடத்தண்ணீர்!

வாசு மற்றவர்களுடன் மானேஜர் அறையில் நுழைந்தபோது, சபேசன் ஜன்னல் வழியாக வெளியே பார்த்துக்கொண்டிருந்தார், பின்னால் கட்டிய கைகளை முறுக்கியபடி. சரிதான், எக்கச்சக்க கோபத்தில் இருக்கிறார், விவகாரம் நல்லதல்ல என்று புரிந்தது.

''என்னப்பா... டெய்லி மார்னிங் ஆஃபீஸ் வந்து ஆஃபீஸ் பாத்ரூமில் குளிக்கறீங்களாமே?'' சபேசன் நேரடியாக விஷயத்துக்கு வந்தார்.

மாணிக்கமும் ரகுவும் ஒருத்தரை ஒருத்தர் பார்க்க, வாசு மெல்ல, ''அது வந்து ஸார், நாங்க இருக்கிற காலனியில் தண்ணிக் கஷ்டம். அதான் இப்படி குளிக்கறதுக்கு இங்கே வர வேண்டியதாப் போச்சு.''

''துணிகளைக் கொண்டுவந்து துவைச்சுட்டுப் போறீங்களாமே?''

தயங்கி, ''ஆமா ஸார்'' என்றனர்.

''என்கிட்டே அனுமதி கேட்டீங்களா? அப்படிச் செய்துக்கலாம்னு நான் பர்மிஷன் கொடுத்தேனா?''

''தண்ணிக் கஷ்டம்தான் ஸாருக்கும் தெரியுமே. கேட்டா நீங்க மறுக்கவா போறீங்க?''

''அதெப்படிப்பா நான் சம்மதிக்க முடியும்? ஆஃபீஸ் ரூல்ஸ் அதுக்கு இடம் கொடுக்காதே? சட்டப்படி அது தப்பு.''

''சட்டப்படி தப்புதான் ஸார். ஆனால்...'' என்று ரகு இழுக்க, மாணிக்கம் தொடர்ந்தான். ''நியாயப்படி இதில தப்பு ஒண்ணும் இல்லே. காலனியில் மூணு நாளைக்கு ஒரு தரம் முக்கால் மணி நேரம் போல தண்ணி வருது. முப்பது குடம் கூடத் தேறாது. அதை வெச்சுக்கிட்டு எப்படி சமாளிக்கறது?''

''கஷ்டம்தான். வெளியே எங்கேயாவது போய்க் கொண்டுவர வேண்டியதுதான்.''

'இது ஒரு நஷ்டமா? கொஞ்சம்கூட சினேகமில்லாமல் இதைப்போய் ஒரு விவகாரமாக்குகிறாரே' என்று எரிச்சலாய் இருந்தது வாசுவுக்கு.

''ஆஃபீஸுக்குத் தண்ணி பிடிச்சுத் தர எக்ஸ்ட்ரா லேபர் எம்ப்ளாய் பண்றோம். செய்யற அளவைப் பொறுத்து அதுக்குப் பணம் பே பண்றோம். தினம் இப்படி குளிச்சு துவைச்சு தீர்க்கிறதால அந்த அளவுக்குத் தினமும் அடிஷனல் எஸ்டாபிளிஷ்மென்ட் ஆகிறது... இல்லையா?''

''சரி, நாங்க தினமும் வேற வழியில தண்ணியை இஷ்டப்படி வேஸ்ட் பண்ணினா மட்டும் அந்த அளவு எக்ஸ்ட்ரா எக்ஸ்பெண்டிச்சர் வராதாக்கும்?''

''அதுவும் தப்புத்தான். இது சட்டப்படி தப்பு. அது நியாயப்படி தப்பு. ஆல்ரைட். நீங்க போகலாம்.''



மத்தியானம் ஹெட்கிளார்க் நாகராஜன் மூன்று பேரையும் அழைத்து, ''இதில ஒரு கையெழுத்துப் போடுங்க'' என்றார்.

''என்ன ஸார் இது?''

''மெமோ, பார்த்தா தெரியலே?''

ஜிவ்வென்று சிவந்து போனார்கள். வாசு மற்றவர்களைப் பார்த்தான். கண்கள் முடிவெடுக்க, மறுநிமிடம் மூவரும் மானேஜர் ரூமில் இருந்தார்கள்.

''என்ன ஸார் இது, மெமோ கொடுத்திருக்கீங்க?''

''ரூல்ஸ்படி செய்ய வேண்டியதைச் செய்திருக்கேன்.''

''ரெண்டு இன்கிரிமெண்ட் கட் பண்ண வேண்டி வரலாம்னு போட்டிருக்கீங்க!''

''மிஸ்யூஸ் ஆஃப் ஆஃபீஸ் ஃபெசிலிடீஸுக்கு அதான்னு நம்ம மேன்வலில் இருக்கு.''

''நாங்க என்ன... வேணுமின்னா இப்படி செய்தோம்? ஸ்டாஃப் எல்லாம் குளிச்சு நல்ல துணி போட்டு நீட்டா வந்தால்தானே ஆபீஸிலே சுறுசுறுப்பா வேலை செய்ய முடியும்?

ஒவ்வொருத்தர் ஸ்டாஃபுக்கு எவ்வளவோ வசதி செய்து தர்றாங்க. நீங்க என்னடான்னா அல்பத்தனமா ஆஃபீஸ் பைப்பில் குளிக்கறதுக்கே காசுக்கணக்கு பார்க்கறீங்க!''

சபேசன் ஆவேசமாக எழுந்தார். ''என்னப்பா ஆளாளுக்குப் பேசிட்டே போறீங்க?

நீங்க செய்யறதையெல்லாம் பார்த்து தலையாட்டிக்கொண்டு இருக்கவா எனக்கு சம்பளம் தர்றாங்க? ஆஃபீஸ் செலவு அதிகம் போகாமல் பாத்துக்கறதும் என் ட்யூட்டி தான்.'' பேசப் பேச அவர் டென்ஷன் ஏறிக்கொண்டே போனது. மேல் மூச்சு கீழ் மூச்சு வாங்கிற்று.

''சரி, கத்தாதீங்க., வேணா இனி நிறுத்திக்கறோம். இப்ப மெமோவை வாபஸ் வாங்கிக்குங்க.''

''என்னப்பா எனக்கு உத்தரவு போடறீங்களா? ஏதாவது சொல்லணும்னா ரைட்டிங்ல கொடுங்க'' மேஜையில் முஷ்டியால் குத்தினார்.

''ஸார், இப்படி நீங்க அறிவுகெட்டதனமா நடந்துக்கிட்டா இதை நாங்க சும்மா விடமாட்டோம்.''

''என்னய்யா பண்ணிடுவீங்க? இந்த உருட்டல் மிரட்டலுக்கெல்லாம் நான் ஒண்ணும் பயந்துடமாட்டேன். நானும் எதுக்கும் ரெடியாதான் இந்த சீட்ல வந்து உக்காந்திருக்கேன். இதுமாதிரி நாலு ஆஃபீஸ் பாத்தவன். உன்னை மாதிரி நூத்துக்கணக்கான ஆட்களை டீல் பண்ணியிருக்கேன்.''

''நாங்களும்தான்.''

அவரது படபடப்பு அடங்கும் முன் கதவைத் திறந்துகொண்டு வெளியேறினார்கள்.

மறுநாள், ஞாயிற்றுக்கிழமை, கடைத் தெருவில் வாசுவும் ரகுவும் நின்றிருக்கும் போது செய்தி வந்தது. ''என்னது?'' அதிர்ந்தான் வாசு.

''ஆமாம்பா. அட்டெண்டர் பாபு சொன்னான். நேத்து ராத்திரி நடந்துருக்கு. டாக்டர் கிட்ட போறதுக்குள்ளேயே எல்லாம் முடிஞ்சிட்டுதாம்...'' என்றான் மாணிக்கம்.

மானேஜர் வீட்டை நோக்கி விரைந்தார்கள்.

''சே, பொசுக்குன்னு போயிட்டாரே!'' என்றான் வாசு. ''ஏண்டா... நேத்து அந்தக் கத்து கத்தினாரே; அதான் இப்படி ஆயிட்டுதா?''

''இருக்காதுடா, நீ பாட்டுக்கு எதையோ கற்பனை பண்ணிட்டு...'' அதட்டினான் ரகு. ''அவருக்கு என்ன நோய் இருந்ததோ...?''

''எனக்கென்னமோ மனசு உறுத்துதுடா.''

''சே.... சும்மா வாயை மூடிட்டு வாங்க'' என்றான் மாணிக்கம்.

சபேசன் வீட்டைச் சுற்றி கூட்டம் கூடியிருந்தது. ரொம்ப சுருக்கமாகப் பழகி நண்பர் வட்டம் அதிகம் வைத்துக் கொள்ளாதவர். சின்னதாகவே கூட்டம்.

''சரி சரி, மளமளன்னு வேலையில இறங்குங்க. மானேஜருக்கு நிறைய பழக்கம் கிடையாது. நாமதான் எல்லாம் பார்க்கணும்.

அடுத்த ஒரு மணி நேரத்துக்குள் வாசுவும் நண்பர்களுமாய்ச் சேர்ந்து சபேசனின் இறுதிப் பயணத்துக்கு எல்லாம்

ஒரு குற்றமும் செய்யாத நீங்க ஏன் தானா வந்து கோர்ட்டுல சரண் அடைந்தீங்க?

எத்தனை காலம்தான் வீட்டுல கைதியா இருக்கிறது எசமான்?!

– வேடியப்பன்

தயாராக்கி விட்டனர்.

அப்போதுதான் அந்தப் பிரச்னை தோன்றி, மெல்ல விஸ்வரூபம் எடுத்தது. பெண்கள் குசுகுசுவென்று பேசிக் கொள்ள, ஆண்கள் அங்குமிங்கும் ஓட வாசு ஓடி வந்து, ''என்னடா அங்கே?'' என்றான். ரகு விசாரித்துவிட்டு, ''பாடியைக் குளிப்பாட்டணும். நீர்மாலைக்கு ஆள் போகணும் இல்லையா, அதான் முழிக்கிறாங்க.''




''இதிலே முழிக்கறதுக்கு என்ன இருக்கு? போய் தண்ணி எடுத்திட்டு வர வேண்டியதுதானே? குடம் இல்லையா?''

''தண்ணி இல்லே. அதான் முழிக்கிறாங்க.''

வாசு திகைத்துப் போனான்.

''வீட்டையும் அனாமத்து ஏரியாவில கொண்டுபோய்க் கட்டியிருக்கார் மனுஷன். அஞ்சு கிலோமீட்டர் ஒத்தையடிப் பாதையில் சைக்கிள் மிதிச்சாத்தான் ஆத்துலேயிருந்து தண்ணி கொண்டு வர முடியும். அக்கம்பக்கத்திலேயும் குடிக்கத்தான் தண்ணியிருக்காம்.''

''நேரம் இருட்டிட்டிருச்சு. பாடியை வெளி வராந்தாவுக்குக் கொண்டு வந்தாச்சு. இனி ரொம்ப நேரம் வெச்சிட்டிருக்க முடியாது.''

''இத்தனை தண்ணிக் கஷ்டத்திலேயா குடித்தனம் நடத்திட்டு இருந்திருக்காரு?''

''இப்ப என்ன பண்றது ரகு?''

''வேறே வழியே இல்லை'' என்ற ரகு வாசுவின் காதில் ஏதோ முணுமுணுத்தான்.

வாசு அவனை விழித்துப் பார்த்தான். ''நீ என்ன சொல்றே?''

''ஆமா, கடைசியில அவருக்கு நம்ம கம்பெனி தண்ணிதான் பயன்படப் போ...'' வாசுவின் கோப விழிகளைப் பார்த்து நிறுத்திக்கொண்டான்.

''சே, என்ன சஜெஷன்டா இது? அவருடைய ஆத்மா இதை எப்படிடா ஏத்துக்கும்? எத்தனை ஸ்ட்ரிக்டா ஒழுங்கா வாழ்ந்தவரு? அத்தனை தண்ணிக் கஷ்டத்திலேயும் இத்தனை பக்கத்தில் ஆஃபீஸ் இருந்தும் அவர் அதை உபயோகிக்கவில்லை. நம்மளைத் திட்டறதுக்கு அவருக்கு முழு உரிமை இருக்கு. வாழ்ந்து காட்டியிருக்கார்டா.''

''ஆபத்துக்குப் பாவமில்லேம்பாங்கடா.'' புறப்படத் தயாரான ரகுவை நிறுத்தினான் வாசு.

''நில்லுடா. ஒருத்தர் உயிரோட இருக்கறப்ப அவர் கொள்கையை மதிக்கறது ஒண்ணும் பெரிய விஷயமில்லை. அவர் செத்த பிறகு மதிக்கணும். அதான் முக்கியம். கஷ்டமும்கூட.''

''அட.... நீ என்னடா நேரம் புரியாம? நேரம் வேறே இருட்டுது. இப்ப என்ன செய்ய முடியும்?''

''முடியும்!'' அழுத்தமாகச் சொன்னான் வாசு. ''சைக்கிளை எடு. குடத்தைக் கட்டு. ஒரே மிதி. அஞ்சு கிலோமீட்டர்தானே? இதோ போயிட்டு வந்திடலாம். கால் மணியில தண்ணி இங்கே வந்தாகணும். ரகு குடங்களை எடு.''

மாணிக்கம் அதற்குள் சைக்கிளை எடுத்து வர ஓட, ரகு குடத்தை எடுக்க ஓடினான். ○



"தூங்கப் போகும்போது, எந்தக் கவலையையும் கூடவே கொண்டு போகக் கூடாது."

"நான் என்ன செய்யறது டாக்டர்! என் ஒய்ஃப் தனியாத் தூங்க மாட்டாங்களே!" - ஜி. லட்சுமிபதி



"நம்ம பையனுக்கு சமூக நல சிந்தனை ஜாஸ்தின்னு எப்படிச் சொல்றீங்க?"

"இப்பல்லாம் யாருக்குக் கடிதம் எழுதினாலும், இருள்... இருள் அறிய ஆவல்னு தொடங்கறானே!"

- பி.ஜி.பி.இசக்கி

"தலைவர் பொய்க்கணக்கு எழுதி மாட்டிக்கிட்டாரு!"

"எப்படி?"

"பாதயாத்திரை போனதுல பெட்ரோல் செலவு எழுதியிருக்காரு!"

- 'இனாம்' ச.ஆ.கேசவன்

# பாதயாத்திரைக்குப் பெட்ரோல்

''கஞ்சன்ங்கிற
தலைப்புல ஒரு
கட்டுரை எழுது.''

''இங்க், பேப்பர்
செலவாகும். நான்
சொல்றேன்...
கேட்டுக்கங்க...''

- ஆர்.தங்கராஜ்





''மோப்ப நாய்கள்லாம் வச்சிருக்காணாமே, கபாலி!''

''மாமூல் வாங்கிட்டுப் போற, போலி போலீஸ்காரங்கள கண்டு பிடிக்கத்தான்!''

- பி.ஜி.பி. இசக்கி



''ஜனாதிபதியைத் தவிர, கவர்னரை மாற்றுகிற அதிகாரம் வேற யாருக்கு இருக்குன்னு தெரியுமா, உனக்கு?''

''தெரியாதே! யாருக்கு?''

''சுரேஷுக்கு...! தேர்வுல தமிழ் நாட்டு கவர்னரையே மாத்திட்டு வந்துட்டானே!

- மதுரை பாலா.கோவிந்தராஜ்

-இரா.முருகன்



# எஞ்சினியரும் எலும்பும்

ஆட்டோரிக்ஷாவும் தொழில் நுட்பமும் புகுந்து புறப்படாத இடம் இல்லை. தெக்கத்தி பூமியில் எலும்பு வைத்தியசாலையும் வடக்குத் தமிழகத்தில் புத்தூர் மாவுக்கட்டுமாக பரம்பரை எலும்பு முறிவு சிகிச்சை சக்கைப் போடு போடுகிறது. இதற்கு சவால் விடும் அலோபதியின் ஆர்த்தோஃபீடிக் சிகிச்சை முறைக்கு தற்போது டெக்னாலஜியின் துணையும் கிடைத்திருக்கிறது. ஒன்றும் பெரிய விஷயம் இல்லை. எஞ்சினியர்கள் செயற்கையாக எலும்பை உருவாக்கிவிட்டனர்.

முழுக்கப் பழுதடைந்து போனது, புற்று நோயால் பாதிக்கப்பட்டது, இயல்பிலேயே குறைபாடு என்று ஏதோ ஒரு காரணத்துக்காக, சிலருக்கு எலும்பை அறுவை சிகிச்சை செய்து நீக்க வேண்டியிருக்கும். நீக்கிய எலும்புக்குப் பதிலாக அதன் இடத்தில் செயற்கையாக உருவாக்கிய எலும்பைப் பொருத்த, பல வருடங்களாக மருத்துவ நிபுணர்கள் மேற்கொண்ட முயற்சிகள் இதுவரை முழுவெற்றி அடையவில்லை. காரணம், எலும்பு என்னும் அதிசய உறுப்பு கெட்டிப்பட்டு இறுகிப்போன கால்சியம் திடப்பொருளாக நீண்டு, மிக மெல்லிய தசைகளிலும் வலிமையான தசைநார்களிலும் முடிவது. கெட்டியான எலும்பைச் செயற்கையாக உருவாக்கினாலும், உடலின் மற்ற பகுதிகளோடு அது இசைவாகக் கலக்க தசைநார்களை உருவாக்க முடியாமல் போகும் என்பதால், செயற்கை எலும்பு இதுவரை டாக்டர் வீட்டு நாய்க்குட்டி விளையாடத்தான் பிரயோஜனமானது. இப்போது தொழில்நுட்பம் முன்னேறியதால் ஆராய்ச்சிப் பட்டறையில் வார்த்தெடுத்த எலும்பை, பாதுகாப்பாக மனித உடலில் பதிக்க சாத்தியம் அதிகம்.

மாஞ்செடிக்குப் பதியன் போடுகிற மாதிரி லாவகமாக எலும்பை உருவாக்குகிறார்கள். இதற்கென்றே உண்டாக்கிய பாலிமர் செயற்கை இழையை வைத்து, எலும்புத் திசுக்களின் கூடாரம் முதலில் ஏற்படுத்தப்படுகிறது. வளர்திறன் கொண்ட இந்தக் கூடாரத்தின் மேல் ஜெனெக்ஸ்-2 என்ற மரபணு சங்கேதத்தைப் பதிக்கும் பூச்சு ஒன்று படர விடப்படுகிறது. எலும்புத் திசுவின் ஒரு ஓரத்தில் அதிகமாகவும் மற்ற ஓரத்தில் குறைவாகவும் படரும் பூச்சு இது.

இதன் காரணமாக, முழு வளர்ச்சி அடையும்போது செயற்கை எலும்பு ஒரு பகுதியில் கெட்டிப்பட்டும் மறுகோடியில் தசைநார் வளர வாய்ப்பாக மென்மையாகவும் உருவெடுக்கிறது. இயற்கையில் மனித உடலில் அமைகிற எல்லா எலும்புகளும் இந்தத் தன்மை கொண்டவை. எனவே, அதே போன்ற குணாதிசயமுள்ள செயற்கை எலும்பு பொருத்தப்படும்போது மனித உடம்பு மறுப்பு சொல்லாமல் அதை



உள்ளே ஏற்றுக்கொண்டு, மற்றவையோடு இசைந்து வளர வாய்ப்பு அதிகமாகிறது.

இந்தச் செயற்கை எலும்பு வளர்ச்சி ஆராய்ச்சி முழுப்பயன் தர இன்னும் கொஞ்சநாள் பிடிக்கும். தற்போது அறுவை சிகிச்சை மூலம் உலோக எலும்புத் துண்டை வைத்து அறுவை சிகிச்சை செய்து, மிகு ஒலி (ultra sound) மற்றும் விரிவடையும் பிளாஸ்டிக் ஆகியவற்றைப் பயன்படுத்தி உலோக எலும்புத் துண்டை நீட்ட இதுவரை முயற்சி எடுக்கப்பட்டது. இப்படி நீட்டப்பட்ட எலும்பைத் தசையோடு ஒட்ட வைக்க ஸ்பெஷல் சிமிட்டி உபயோகப் படுத்துவது வழக்கம். கடைவாய்ப் பல்லில் குழி விழுந்து பிராணன் போகும் வலி எடுக்கும்போது, பல் டாக்டர் 'சிமிண்ட்' வைத்து அடைப்பாரே, அப்படியானதுதான் இந்த எலும்பு ஒட்டு சிமிட்டியும். ஆனாலும், எலும்பு சிமிண்ட் சாதுவாக இல்லாது போனது துரதிர்ஷ்டம். இருக்கப்பட்ட திசுக்களை நாசமாக்கி, முதலுக்கே மோசம் செய்யக்கூடியது இது.

சிமிண்டே வேண்டாம் என்று முடிவெடுத்த மருத்துவ வல்லுனர்கள், 'வேறு ஏதாவது உதவி செய்ய முடியுமா, கொஞ்சம் பாருங்க ஸார்?' என்று தொழில்நுட்பப் பங்காளிகளைக் கேட்டார்கள். 'இழுங்க' என்றார்கள் எஞ்சினீயர்கள். அதாவது உலோக எலும்பில் அழுத்தத்தைச் செலுத்தி பத்திரமாகப் பிடித்து இழுத்தால் அது நீளலாம். உலோக எலும்புத் துண்டை உருவாக்கும்போதே அதில் இழுக்க இழுக்க நீளும் ஸ்பிரிங் அமைப்பைப் பொருத்தி விடுவதால் முயற்சிக்கு மகிழ்ச்சிகரமான வெற்றி. எலும்பில் வேண்டுமானால் செயற்கை இருக்கலாம். மகிழ்ச்சி எப்போதும் அசல் தான். ○



## டிஜிட்டல் கேன்டீன்

**மேஷம்:** ஆடை ஆபரணங்கள் வாங்குவீர்கள். தேர்வில் அதிக மதிப்பெண்கள் பெறுவீர்கள். குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். சொத்துக்கள் வாங்க சிறந்த தருணம். நண்பர், உறவினர்களால் அனுகூலம் ஏற்படும். நீண்ட தூரப் பிரயாணம் வந்து சேரும். சனி/ராகு/கேது வழிபட்டு வருதல் நலம் தரும்.

**ரிஷபம்:** உடல் நிலை சீராகும். கடன் கமை தீரும். தெய்வ பலம் நிறைந்து இருக்கும். புதிய கடன் கிட்டும். உத்தியோகத்தில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். மறைமுக எதிர்ப்புகள் விலகும். வியாபாரத்தில் அபிவிருத்தி ஏற்படும். சனி/குரு வழிபாடு செய்து வருதல் நலம் தரும்.

**மிதுனம்:** சுப காரியம் கைகூடும். ஆடை ஆபரணங்கள் வந்து சேரும். கூட்டாளிகளை விட்டு விலகிப் போவீர்கள். ஆரோக்கியம் நன்றாக இருக்கும். வீடு/மனை வாங்க உகந்த காலம். உத்தியோக உயர்வு, இட மாற்றம் ஏற்படும். ராகு/கேது வழிபாடு செய்து வருதல் நலம் தரும்.

**கடகம்:** குடும்ப வாழ்வில் அனுசரணை தேவை. இன்னும் ஒரு சில மாதங்கள் பொறுமையைக் கையாளுவது நல்லது. தேவையில்லாத கடன் கமை அதிகரிக்கும். உடல் ஆரோக்கியத்தில் கவனம் தேவை. ராகு/கேது/சனி/குரு வழிபாடு செய்து வர சங்கடங்கள் தீரும்.

**சிம்மம்:** சுப காரிய நிகழ்ச்சிகள் கைகூடும். வெளிநாடு செல்லும் யோகம் வந்து சேரும். கல்வி வளம் மேலோங்கும். கடன் கமை தீரும். வீடு/மனை வாங்க நல்ல காலம். பண வருவாய் பெருகும். மனச் சலனம் விலகும். சனி வழிபாடு செய்துவர நற்பலன் கிட்டும்.

**கன்னி:** வாக்குவன்மை மேலோங்கும். பண வசதி பெருகும். கல்வி வளம் மேலோங்கும். விரயங்கள் குறையும். வீடு மாற்றம் ஏற்படும். பூர்வீகச் சொத்து பாகப்பிரிவினை ஆகும். எதிரிகளால் தொல்லை இருக்காது. வெளியூர் பிரயாணம் வந்து சேரும். பிள்ளைகள் இடம்

என் நாக்குல சனின்னு சொல்றாங்க! எலெக்ஷன்ல நிக்கலாமா ஸார்?

**12.10.08 முதல் 18.10.08 வரை**




மாறிச் செல்வார்கள். சுபகாரியம் கைகூடும். ராகு/கேது/குரு/சனி வழிபாடு செய்துவர நற்பலன் உண்டாகும்.

**துலாம்:** உத்தியோகத்தில் வேலைப் பளு அதிகரிக்கும். தொழில் துறையில் முன்னேற்றம் உண்டாகும். உடன் பிறந்தவர்களால் நற்பலன் உண்டாகும். புதிய தொழில் துவங்க ஏற்ற தருணம். உடல் ஆரோக்கியம் பாதிக்காது. எதிர்ப்பு தொல்லைகள் விலகும். செலவுகள் சுபமானதாக இருக்கும். ராகு/கேது/குரு வழிபாடு செய்து வர நற்பலன் உண்டாகும்.

**விருச்சிகம்:** தனயோகம் கிட்டும். திருமணம் கூடி வரும். வீடு/மனை வாங்க நல்ல காலம். வெளியூர் பிரயாணம் தேடி வரும். பண வருவாய் மிகுதி ஆகும். கல்வி வளம் மேலோங்கும். ஆடை ஆபரணப் பொருட்கள் சேரும். எதிரிகளால் தொல்லை இருக்காது. மகப்பேறு உண்டாகும். செலவுகள் கட்டுக்கடங்கி இருக்கும். சனி வழிபாடு செய்துவர நற்பலன் கிட்டும்.

**தனுசு:** கூட்டாளிகளை விட்டு விலக நேரிடும். கொடுக்கல், வாங்கலில் சிக்கல் ஏற்படும். வராத நிலுவைகள் வர கால தாமதம் ஆகும். உணவுக் கட்டுப்பாடு அவசியம். வேலைப் பளு அதிகரிக்கும். செலவுகள் சுபமானதாக இருக்கும். வழக்கு சற்று தள்ளிப் போகும். உடன்பிறப்புகள் விலகிப் போவார்கள். ராகு/கேது/குரு வழிபாடு செய்து வர நற்பலன் கிட்டும்.

**மகரம்:** எதிலும் கவனமுடன் செயல்படுவது நற்பலனை அளிக்கும். கொடுக்கல் வாங்கலில் கவனம் தேவை. உடல் ஆரோக்கியத்தில் கவனம் செலுத்தவும். அநாவசியமான செலவுகள் வந்து சேரும். மனக்குழப்பம் அதிகரிக்கும். வரவுக்கும் செலவுக்கும் சமமாக இருக்கும். கடன் சுமை அதிகரிக்கும். வியாபாரத்தில் மந்தமான சூழ்நிலை உருவாகும். ராகு/கேது/சனி/குரு வழிபாடு செய்துவர நற்பலன் உண்டாகும்.

**கும்பம்:** ரொம்பவும் உல்லாசமான வாரம். பண வசதி பெருகும். இல்லற வாழ்வு நன்றாக இருக்கும். மகப்பேறு பாக்கியம் கிட்டும். நீண்டநாள் பிரச்னை முடிவுக்கு வரும். கடன் சுமை தீரும். உடல் ஆரோக்கியம் பாதிக்காது. வராத நிலுவைகள் வந்து சேரும். பணக் கஷ்டம் இருக்காது. குழந்தைகளால் மகிழ்ச்சி ஏற்படும். சனி வழிபாடு செய்துவர நற்பலன் உண்டாகும்.

**மீனம்:** பூர்வீகச் சொத்து பாகப்பிரிவினை ஆகும். கூட்டாளிகளை விட்டு விலக நேரிடும். வழக்கு வெற்றி அளிக்கும். வியாபாரத்தில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். உடல் ஆரோக்கியம் பாதிக்காது. உத்தியோகத்தில் உயர்வு ஏற்படும். வராத பணம் வந்து சேரும். மன சஞ்சலம் தீரும். ராகு/கேது/குரு வழிபாடு செய்துவர நற்பலன் உண்டாகும். ○

# நடக்குமென்பார்; நடக்கும்!

தஞ்சை பரத்வாஜ்

# 'அண்டமுற நிமிர்ந்தாடும்

சிவாலயங்களில் அறுபத்தி மூன்று நாயன்மார்களையும் வரிசையாக நிறுவியிருப்பதைப் பார்த்திருப்பீர்கள். நாயன்மார்கள் மரியாதையாக நின்றபடி இருக்க, ஒருவர் மட்டும் அமர்ந்த கோலத்தில் காட்சி தருவதைக் கவனித்திருக்கிறீர்களா? அவர்தான் காரைக்கால் அம்மையார். இறைவன் அவருக்குத் தந்த அந்தஸ்து அப்படி! பெருமானாலேயே "அம்மையே" என்று அழைக்கப் பெற்றவள். உமையவளிடம், "இவள் நம்மைப் பேணும் அம்மை காண்" என்று பெருமான் இவரை அறிமுகம் செய்து வைத்தாராம்! பெருமான் ஒரு சிவனடியாராக அம்மையார் இல்லத்துக்கு வந்தபோது, ஒரு தாயின் பரிவுடன் இட்ட ஒருவேளை சோற்றுக்குக் கட்டுப்பட்டு, அவளுக்குத் தாயின் ஸ்தானத்தைத் தந்தான் இறைவன். அந்த ஸ்தானத்தை மதித்து அம்மையாருக்கு அமர்ந்த கோலம்!

இறைவனிடம் அந்த அம்மையார் கேட்ட வரம் என்ன தெரியுமா? "நீ ஆடும் பொழுது உன் திருவடிக் கீழ் அமர்ந்து உன் ஆட்டத்துக்கு நான் பின்பாட்டுப் பாட வேண்டும்" என்பதுதான். "தென் திசையில் திருவாலங்காட்டில் போய் இரு. யாம் அங்கு வந்து உன் விருப்பத்தை நிறைவேற்றுவோம்" என்று அருளினானாம் ஐயன். அம்மையார் பாட, ஐயன் தாண்டவம் ஆடிய திருக்கோலம் திருவாலங்காட்டில் காட்சி தருகிறது. அற்புதமான ஊர்த்துவ தாண்டவக் கோலம் இது!

பெருமான் காளியோடு போட்டியிட்டு ஆடிய ஆட்டமான ஊர்த்துவ தாண்டவக் கோலத்திலிருந்து மாறுபட்ட கோலம் இது. காளியோடு ஆடிய ஆட்டத்தில் வலது காலை மடித்து உயர்த்தி வலது காதின் அருகே பாதம் வருமாறு அமைந்திருக்கும்... அந்த தாண்டவக் கோலம் வேறு; இந்தக் கோலம் வேறு. திருவாலங்காட்டில் வலது திருப்பாதத்தை ஊன்றி, இடது திருப்பாதத்தை உயரத் தூக்கி ஆடும் கோலம் விளங்குகிறது. பார்க்கப் பார்க்கப் பரவசமூட்டும் திருமேனி! அந்த ஆட்டத்தின் வீச்சு, திசைகள் எங்கும் வீசி வியாபித்து நிற்கிறது.

சிவதாண்டவங்களில் மிகத் தொன்மையான தாண்டவம் இந்த ஊர்த்துவ தாண்டவம். ஐந்து நடன சபைகளில் இரத்தின சபையாக விளங்குவது திருவாலங்காடு. (இரத்தினங்கள் இன்று போன இடம் தெரியவில்லை!) இங்கு எட்டு திருக்கரங்கள் எண் திசைகளிலும் வீசிப் பரந்திருக்க, அனல் சூழ்ந்த பிரபாமண்டலத்துள் உயரத் தூக்கிய திருவடியுடன் காட்சி தருகிறார். இந்தப் பிரபஞ்சம் முழுவதிலும் வியாபித்து அண்டமுற நிமிர்ந்தாடும் அப்பன்,



த.கி.நீலகண்டன்

# அப்பன்'

இங்குள்ள செப்புத் திருமேனியிலும் அந்த வேகமும் வீச்சும் விளங்கக் காட்டுகிறார்.

விரித்த செஞ்சடையிலும் ஜடாமகுடத்திலும் பாம்புகள் நெளிகின்றன. மண்டை ஓட்டையும் பிறை நிலவையும் சடையில் சூடியிருக்கிறார். காதுகளில் தோடும் மகர குண்டலமும் அணிசெய்கின்றன. கழுத்திலும், மார்பிலும், தோள்களிலும், கைகளிலும், இடையிலும், பாதங்களிலும் அந்தந்த அங்கத்துக்கு அழகு சேர்க்கும் ஆபரணங்கள். எட்டு திருக்கரங்கள். உடுக்கை, நீண்ட சூலம், தீச்சுடர், பாம்பு ஆகியவற்றை நான்கு திருக்கரங்களில் ஏந்தியிருக்க, இரண்டு திருக்கரங்கள் அபயஹஸ்தம், டோல ஹஸ்தம் (தொங்கும் திருக்கரம்) காட்டுகின்றன. மற்ற இரு திருக்கரங்களில் இடதுகரம், உயரத் தூக்கிய இடதுகாலுக்கு இணையாக மேலே உயர்ந்து விளங்குகிறது. வலது கரம் வீசி ஆடுவதாக அமைந்திருக்கிறது. வலது

பாதம் முயலகன் மீது ஊன்றியிருக்க, இடது திருப்பாதம் மேல்நோக்கி உயர்ந்து எழுகின்றது. இதனாலேயே இந்தக் கோலம் ஊர்த்துவ தாண்டவக் கோலம் எனப்படுகிறது. (ஊர்த்துவ - மேல் நோக்கிய) திருமுகத்தில் கம்பீரமும், பெருமிதமும் நிறைந்து விளங்க இந்தப் பேரண்டத்தின் கதியை நிர்வகிக்கும் பெருமானாய் விளங்குகிறார் இவர்.

''அம்மையே... இந்த ஆட்டத்தைப் பார்க்கத்தானே ஆசைப்பட்டாய்! இதோ பார்த்துக் கொள்'' என்று அபூர்வக் கோலம் காட்டுகிறான் பெருமான்.

''அறவா! நீ ஆடும் போது உன் அடியின் கீழ் நான் மகிழ்ந்து பாடி இருக்க வேண்டும்'' என்று விரும்பிக் கேட்ட அம்மை, இவர் திருவடியின் கீழேயே என்றும் இருக்கின்றார். இளமையும், அழகும் நிரம்பிய புனிதவதியாய் இருந்தவள், இறைவனிடம் வேண்டிப் பெற்ற பேயுடலுடன் காட்சி தருகிறாள். 'எலும்பும் தோலுமாய்' என்கிறோமே! அதற்கு உதாரணம் இந்த அம்மையின் திருவுருவம் தான். குச்சிக் குச்சியாய் நீண்ட கால்களும், கைகளுமாகச் சப்பணமிட்டு அமர்ந்த கோலம். சடை கட்டிய கேசபாரம். சுருங்கித் தளர்ந்து தழைந்த ஸ்தனங்கள். ஒட்டி உலர்ந்த, சதைப்பற்று சிறிதும் இல்லாத முகம். அப்பன் திருவடிக் கீழ் அம்மை அமர்ந்திருக்கும் கோலம் காண, நம் நெஞ்சம் கரைந்து கண்கள் பனிக்கின்றன. பேயின் உடல்; தாயின் உள்ளம்! தாயும் தந்தையும் இல்லாத ஐயனின் சுவீகாரத் தாய்!



**பேயின் உடல்; தாயின் உள்ளம்! தாயும் தந்தையும் இல்லாத ஐயனின் சுவீகாரத் தாய்!**

அம்மையாரும் தன் ஸ்தானத்துக்கு ஏற்றவாறு அல்லவா, பெருமானிடமும் பெருமாட்டியிடமும் பரிவுகாட்டுகிறார்! பிள்ளையிடம் காட்டும் பரிவை இந்தப் பிரபஞ்சத்து உயிர்களிடமும் காட்டுகிறார். அதற்குரிய கண்டிப்பும் காட்டுகிறார்.

''இந்தப் பிரபஞ்சத்தையே மேடையாகக் கொண்டு ஆடுகிறாய். கண்மண் தெரியாமல் நீ ஆடும் ஆட்டத்தில், ஒரு அடியை நீ மாற்றி வைத்து விட்டால் போதும். பாதாள லோகம் பெயர்ந்து போய் விடும். தலையைச் சுழற்றிச் சுழற்றி நீ ஆடும் ஆட்டத்தில், ஒரு மயிரிழை தப்பினாலும் வான் முகடுகள் பேர்ந்து போகும். எட்டுத் திக்குகளிலும் உன் கைகளை விசி ஆடுவதில் சற்றுப் பிசகினாலும் திசைகள் எல்லாம் கலங்கி, சிதறிச் சின்னாபின்னம் ஆகிவிடும். நீ ஆடுகிற ஆட்டத்தையெல்லாம் இந்தப் பிரபஞ்சம் தாங்காது! ஜாக்கிரதை!'' என்கிறார்.

*''அடிபேரில் பாதாளம் பேரும்; அடிகள்*
*முடிபேரில் வான் முகடுபேரும் - கடகம்*
*மறிந்தாடும் கைபேரில் வான்திசைகள் பேரும்!*
*அறிந்தாடும்! ஆற்றாது அரங்கு!''*

எச்சரிக்கையும், கண்டிப்பும் கலந்த தொனி! ஐயன் ஆடும்போது அவன் அடிக்கீழ் அமர்ந்து பாடவேண்டும் என்று அம்மையாருக்கு ஏன் ஆசை வந்தது என்று இப்போது புரிகிறதா?

அப்பன் ஆட்டத்துக்கு அம்மையார், பின்பாட்டு பாட விரும்பினாரா? அல்லது தன்பாட்டுக்கு ஏற்ப அப்பன் ஆடவேண்டும் என்று விரும்பினாரா? ●

# பேச ஒரு துணை!

ஹனீஷ் தாத்தா



ஜன்னலோர இருக்கையில் இருந்த எனக்கு, அந்த நிறுத்தத்தில் ஏறிய வயதான மனிதரை, ஏனோ முதல் பார்வையிலேயே சுத்தமாய் பிடிக்காமல் போனது.

முகத்தில் தாடி. கண்கள் சிவந்திருந்தன. குடியா, வயதின் தளர்ச்சியா அல்லது இரண்டுமா எனத் தெரியவில்லை. நடையில் தள்ளாட்டம். இதில் ஷாப்பிங் போய் வந்ததற்கு அடையாளமாய், கையில் பைகள் வேறு.

என் பக்கத்து இருக்கை காலியானதால், தடுமாறிய அவர் சட்டென்று என் அருகில் அமர்ந்தார். அருவருப்பாய் எழுந்து விடலாம் என நினைத்தவன் நாகரிகம் கருதி, நெளிந்தபடியே அமர்ந்து கொண்டேன்.

''டெர்மினல் வரை போகிறீர்களா?''

மெல்லப் பேச்சைத் துவக்கினார். நான் பொதுவாய் தலையசைத்தேன்.

''இன்றைக்கு என் மனைவியின் பிறந்தநாள். அதனால்தான் ஷாப்பிங் போய்ட்டு வர்றேன்.''

மனைவியைப் பற்றிப் பேசும்போது, அவரது கண்களில் ஒரு பிரகாசம் தெரிந்தது.

''என் மனைவிக்கு ஷாப்பிங் போவதென்றால் ரொம்பப் பிடிக்கும். குறிப்பாய் எதுவும் வாங்கவில்லை. அவளுக்குப் பிடித்த நிறத்தில் காட்டன் புடைவை. கொஞ்சம் இனிப்பு. அவ்வளவே. சின்ன வயதில் கல்யாணம். காதல் கல்யாணம் தான். நாற்பது வருட அன்னியோன்யம். குழந்தைகள் இல்லை. அதை ஒரு குறையாய் அவள் என்றைக்குமே நினைத்ததில்லை.

இன்றைக்கு அவள் உயிரோடு இல்லை. ஒரு வருடம் நிறையப் போகிறது. இருந்திருந்தால், என்னைக் கடைக்குப் போக விட மாட்டாள். எனக்கு எல்லாமே அவள்தான்.

அவள் இல்லாத காலியான அந்த வீட்டை, தனிமையை எதிர்கொள்ளும் துணிவு எனக்கு இல்லை. நேரங்கழித்தே வீடு திரும்புவேன். பிறந்தநாள். அதுதான் தனியா அவகூட அலைஞ்ச இடத்தையெல்லாம் சுற்றிட்டு வர்றேன்.''

இதற்குள் அவர் இறங்க வேண்டிய இடம் வந்துவிட்டதால், பொறுமையாய்க் கேட்டதற்கு நன்றி சொல்லிச் சென்றார்.

அந்த மனிதர் ஏறியதிலிருந்து, அவரோடு நான் ஒரு வார்த்தை கூடப் பேசவில்லை.

கையசைத்து விடைபெற்ற அந்தப் பெரியவரைப் பற்றி, முதலில் இருந்த வெறுப்பும் அருவருப்பும் இப்போது இல்லை என்பதை என்னால் முழுதாய் உணர முடிகிறது. ●

மகளிர் கிறிஸ்துவக் கல்லூரியில் 'Swasth 08' என்ற ஆரோக்கியத்தை அறிவுறுத்தும் ஒரு விழா, வெகு விமரிசையாக நடைபெற்றுக் கொண்டிருந்த அழகான மாலைப்பொழுதில் நாம் விசிட் அடித்தோம்!

'ஆஹா ஆரோக்கியம், ஆஹா ஆனந்தம்' என்ற சந்தோஷக் கச்சேரியைத் தொடர்ந்து, சுவாரஸ்யமான பேச்சுக் கச்சேரியைத் தொடங்கி வைத்தார் ப்ராத்னா. ''உங்களை ரொம்ப சந்தோஷப் படுத்தற, எரிச்சல்படுத்தற



# தலையி
# மூளைக்
# வானவி




விஷயங்களைப் பத்திக் கொஞ்சம் சொல்லுங்களேன்'' என்றதும், ''தினம் நாங்க போற பஸ் பயணம்தாங்க அது. ரொம்ப ஜாலியா இருக்கும்; சில சமயம் ரொம்ப torture-ஆவும் இருக்கும். அதுக்குக் காரணம் காலேஜ் பாய்ஸ். அது என்ன மாயமோ மந்திரமோ தெரியல, சென்னை சிட்டி காலேஜ்ல இருக்கற பாதி பசங்க எங்க காலேஜ் வாசல்லதான் தவம் கிடப்பாங்க. ஈவ் டீஸிங்கற சமாச்சாரம் எல்லையத் தாண்டாத வரைக்கும் ஓ.கே. அதுவே ஒரு லிமிட்டைத் தாண்டிப் போகும்போது ரொம்பக் கோபமா வருது. ஏதோ அவங்க பாட்டுப் பாடறாங்கன்னா, சரி நாமளும் கேட்டு ரசிக்கலாம். ஆனா ஓவரா ஆ ஊன்னு கத்தறது, வாய்க்கு வந்தபடி கமெண்ட் பண்ணுவது இதெல்லாம்தான் சங்கடமா இருக்கும். ஏதோ இவங்கதான் காலேஜ் ஹீரோ மாதிரி, ட்ரெஸ் பண்ணிக்கிட்டு வந்து நிப்பாங்க பாருங்க. சகிக்காது.

லேட்டஸ்டா ரிலீஸ் ஆகி சக்கப் போடு போடற படத்து ஹீரோவ, அப்படியே காப்பி அடிச்ச ட்ரெஸ் பண்ணிட்டு வந்து நிக்கற பசங்கள பார்த்து freeeeeeeeeeky dudesன்னு சொல்லுவோம்'' என்று சொன்ன ப்ராத்னாவைத் தொடர்ந்து ஸ்வேதா,

''ஏய், பசங்கள மட்டும் சொல்றியே... சில பொண்ணுங்க இருக்காங்க. கையில ஏகப்பட்ட வளையல்கள், காதுல ஏகப்பட்ட வளையங்கள்ன்னு ஃபேன்ஸி ஸ்டோர் மாதிரி வருவாங்க!

அந்தப் பொண்ணுங்கள சிலிப்பின்னு சொல்லுவோம். ஸ்டைல்ன்னு நினைச்சுக்கிட்டு தலைல வானவில்ல கவுத்தா மாதிரி ஏகப்பட்ட கலர்களோட வலம்வர்ற பசங்களப் பார்த்தா ரொம்பச் சிரிப்பா இருக்கும்'' என்று சிரிக்கிறார் ஸ்வேதா.

''ஹை... ஹை... பசங்களோட கலர் சென்ஸ் பத்திச் சொல்றியே! பச்சை கலர்லயே நெயில் பாலீஷ் போடுவாங்களே.. எங்கேயிருந்துதான் இப்படி விநோதமான கலர்கள்லாம் அவங்களுக்குன்னு கிடைக்குமோன்னு நினைக்கற அளவுக்கு ட்ரெஸ் பண்ணிக்குவாங்க. அவங்களுக்கு நாங்க 'மேக்கப் நிஷா'ன்னு பெட் பேர் வெச்சிருக்கோம்.



நடுத்தரக் குடும்பத்துலேர்ந்து வர்ற பையனா இருந்தாலும் பிரான்டட் ஷர்ட்ஸ், ஷூ, சென்ட்ன்னு எல்லாருமே பிரான்டட் பாய்ஸ்தான். ஆனா நிஜமாவே பெண்களுக்கு சிம்பிளா ட்ரெஸ் பண்ணி நேச்சுரலா இருக்கறவங்களத்தான் பிடிக்கும்னு அவங்களுக்குத் தெரியறதில்ல'' என்று முடித்தார் புஷ்பிதா.

''ஆயிரம்தான் சொல்லுங்க. இன்னும் ஈவ்-டீஸிங் நம்ம சென்னையை விட்டுப் போகவே இல்லை. முன்னைவிட இப்போ இன்னும் அது ஜாஸ்தியாத்தான் ஆகியிருக்கு'' பொருமிய தியாவைச் சமாதானப்படுத்தி "Adam teasing கூடத்தான் இருக்கு. பெண்கள் ஒருத்தர் காதுக்குள்ள ஒருத்தர் பசங்களப் பத்தி நல்லா கமெண்ட் பண்ணுவோம். ஆனா அது பசங்களுக்குத் தெரியாது'' என்கிறார் திவிஸ்யா.

''முன்னெல்லாம் பாய்ஸ்ன்னாலே ரொம்பப் பயமா இருக்கும். இப்போ சுத்தமா பயமே இல்ல. ஏன்னா நாங்கள்லாம் இப்போ சீனியர்ஸ் இல்ல... எம்.ஏ. படிக்கறோமே. நம்மள விட சின்ன வயசுப் பசங்க நம்மளப் பார்த்து கமெண்ட் பண்ணுவது ரொம்ப funnyயாக இருக்கும்'' என்கிறார் ஹெனா நிட்டா.

''நான் மிசோரமைச் சேர்ந்த பொண்ணு. ஆனா என்னைப் பார்த்து ஏதோ ஜப்பான்லேர்ந்தோ, சைனாலேர்ந்தோ வந்த பொண்ணுன்னு நினைச்சு, பசங்க பேசிக்கறது ரொம்ப ஜோக்கா இருக்கும்'' என்கிறார் ரெபெக்கா.

''ஆக, இதனால் சகலமாணவர்களுக்கும் சொல்லிக் கொள்வது, ஈவ் டீஸிங்கற பேர்ல, கன்னாபின்னா பேத்தல்ஸ் எல்லாம் இல்லாம, ஜாலியா கமெண்ட் அடிப்பது, பாட்டு பாடுவது என இதோடு நிறுத்திக்கங்க...'' எனக் கோரஸாகக் கோரிக்கை விடுக்கிறார்கள் WCC பெண்கள்.

**- நளினி சம்பத்குமார்**

படங்கள் : **குமார்**

# திருக்குறள் தியானம்

**திருக்குறள் தியானம், பூஜ்யஸ்ரீ ஓங்காராநந்த ஸ்வாமிகள், ஸநாதநா பதிப்பகம், 142, முதல் மாடி, கிரீன்வேஸ் ரோடு, ராஜா அண்ணாமலைபுரம், சென்னை - 600 028. ரூ.75.00**

தினமும் ஒரு திருக்குறள் தியானத்துக்கு எடுத்துக் கொள்ளப்பட்டு, அக்குறள்களுக்கு ஒத்த பிற சாத்திர வாக்கியங்களும் கொடுக்கப்பட்டு அற்புதமாக இந்நூல் வெளிவந்துள்ளது. தேர்ந்தெடுக்கப்பட்ட 366 குறட்பாக்கள் இந்நூலில் அமைந்துள்ளன. தினமும் ஒரு நற்சிந்தனையைத் தூண்டவும், ஒரு தேடலைச் சாத்தியப்படுத்தவும் உதவும் நூல்.




**நம்ம நாட்டுப்புற நிர்வாகிங்க, டாக்டர் ஆர்.நடராஜன், மணியம் பதிப்பகம், ரத்னமுதலி தெரு, குறிஞ்சிப்பாடி. ரூ.100.00**

நம் மண்ணின் முதல் கள நிர்வாகவியல் நூல் என குறிப்பிடப்பட்டுள்ள இந்நூலை, துறை சார்ந்த பதங்களைப் பயன்படுத்தி மலைக்க வைக்காமல், எளிய நடையில் பழகு தமிழில் தந்துள்ளார் ஆசிரியர். நூலின் முதல் அத்தியாயத்தில், தான் கட்டுரைகள் போல் கதைகளும், கதைகள் போல் கட்டுரைகளும் எழுதுவதாகக் குறிப்பிடுகிறார். பின்னது உண்மைதான் என்பதுபோல பதினெட்டு அத்தியாயங்களும் கதைப்பாங்கில் செய்திகளை விரித்துச் செல்கின்றன. விற்பனை, நிர்வாகத் துறைகளில் ஆர்வமுள்ளவர்கள் படித்துப் பாதுகாக்க வேண்டிய நூல்.







**உன்னை அறிந்தால், மஹாரண்யம் ஸ்ரீ முரளீதர சுவாமிஜி, கற்பகம் புத்தகாலயம், 412, சுந்தரம் தெரு, தியாகராய நகர், சென்னை - 600 017. ரூ.50.00**

மனித நேயம், வாழ்வியல், தன்னம்பிக்கை போன்ற கருத்துக்களின் அடிப்படையில் அமைந்த 30 கட்டுரைகள் நூலில் இடம் பெற்றுள்ளன. என்றாலும் 'நம்பிக்கை' என்னும் கருத்து, எல்லாக் கட்டுரைகளிலும் அடிநாதமாக இழைந்துள்ளது. கட்டுரைகள் என்ற அளவில் இல்லாமல் சொல்ல வந்த செய்திகளை, எளிய கதைகள் மூலம் விளக்கியிருப்பது வாசிப்பில் புதிய அனுபவத்தைத் தருகிறது. வாசித்து முடித்தவுடன் ஒரு நம்பிக்கை ஊற்று நம்முள் பீறிடுவதை உணரத் தரும் நூல்.

**- நேயமுகில்**

## அன்றும் இன்றும் என்றும்

# இந்த ஸ்திரீகள்

இல்வாழ்க்கையின் இன்ப சுகத்தை நன்கு விளக்கும் கதை ஒன்று தெரியுமா? மனிதர்கள் தங்கள் பூத உடலை நீத்து, ஆவி வடிவில் யாத்திரை தொடங்கிச் செல்லும் போது, அவர்களில் சொர்க்கம் செல்வோரும், நரகம் செல்வோரும், தனித்தனியே பிரிக்கப்படும் முச்சந்தி ஒன்றிருக்கிறது. ஒருநாள் மூன்று ஆவிகள் அவ்விடத்தில் சேர்ந்தாற்போல் வந்து சேர்ந்தன. அங்கே காவல் புரிந்த தேவ தூதன் அந்த ஆவிகளை வழிமறித்து நிறுத்தி, அவற்றின் உலக வாழ்க்கையைப் பற்றிய விவரங்களைக் கேட்டான்.

**முதல் ஆவி:** தேவ! நான் பூவுலகத்திலே சுத்தப் பிரம்மச்சாரியாயிருந்தேன். பெண்களின் முகத்தைக் கூட ஏறிட்டுப் பார்த்ததில்லை. ஆகையால், என்னைச் சொர்க்கத்திற்கு அனுப்பவேண்டும்.

**தேவதூதன்:** அடே! பூவுலகத்திலே அவ்வளவு சுகமாய் இருந்துவிட்டு இல்வாழ்க்கையில் புகாமலே தப்பித்து வந்தவனா நீ? அப்படியானால் கொஞ்ச நாளைக்கு நீ நரகத்தில் இருந்து வரலாம், போ அந்தப் பாதையில்!

**இரண்டாவது ஆவி :** ஸ்வாமி! நான் பதினெட்டு வயதில் மணம்செய்து கொண்டவன். அதுமுதல் அறுபத்திரண்டு வயது வரையில் இல்வாழ்க்கை இன்னல்களை அனுபவித்திருக்கிறேன். கருணை செய்யவேண்டும்!

**தேவதூதன் :** ஐயோ பாவம்! நாற்பத்து நான்கு வருஷமா கிரகஸ்தா சிரமத்தில் இருந்து கஷ்டப்பட்டாய்? போதும் உனக்குத் துன்பம், இதோ சொர்க்கப் பாதையில் செல்.

**மூன்றாவது ஆவி :** (முதல் இரண்டு ஆவிகளைப் பற்றிய தீர்ப்பையும் கவனித்து விட்டு) பிரபோ! அடியேன், ஒரு பெண்டாட்டி இறந்த பிறகு இரண்டாவது கல்யாணம் செய்து கொண்டு கஷ்டப்பட்டவன். என்னைச் சொர்க்கத்துக்கு அனுப்புங்கள்.

**தேவதூதன் :** அடே, முட்டாள்! ஒரு தடவை இல்வாழ்க்கையின் கஷ்டங்களை அனுபவித்துத் தெரிந்துகொண்ட பிறகும், இரண்டாவது தடவை கல்யாணம் செய்து கொண்டாயா? உன்னைப் போன்ற நிர்மூடர்களுக்குச் சொர்க்கத்தில் இடமில்லை. போ, நித்திய நரகத்துக்கு!

மேற்சொன்ன கதையில், புருஷர்களுக்கு நரகத்தைப் போல் துன்பம் அளிப்பதாக இல்வாழ்க்கை கருதப்பட்டிருப்பதேன்? அதாவது, குடும்ப வாழ்க்கையைப் புருஷர்களுக்கு நரகமாகச் செய்வது எது? ஸ்திரீகளுடைய விவாதம் செய்யும் சுபாவந்தான் என்று எனக்குத் தோன்றுகிறது.

உதாரணத்துக்கு இதைக் கேளுங்கள். ஒருநாள் நானும் எனது நண்பர் ஸ்ரீமான்... அவர்களும் ஸல்லாபம் செய்துகொண்டிருந்தோம். ரவீந்திரநாத் தாகூரின் சிறுகதைகளைப் பற்றிப் பேச்சு வந்தது. பாரதியாரும், வ.வே.சு. அய்யரும் சேர்ந்து அச்சிறுகதைகளில் சிலவற்றை அற்புதமான தமிழ்நடையில் மொழிபெயர்த்து வெளி

யிட்டிருக்கிறார்கள் அல்லவா? அந்தப் புத்தகத்தில் வெளியாகியிருக்கும் கதை களைப் பற்றிப் பேசினோம். அவைகளில் ஒன்றை, 'எல்லாவற்றிலும் சிறந்தது' என்று நான் குறிப்பிட்டேன். அவர் வேறொரு கதையைப் பற்றி அத்தகைய அபிப்பிராயத் தைத் தெரிவித்தார். நாங்கள் விவாதமிட்டுக் கொண்டிருக்கையில் அந்த ஸ்ரீமானுடைய தர்மபத்தினி அங்கே வந்தார். விவாதம் இன்னதென்று அந்த ஸ்ரீமதி அறிந்ததும் என்ன சொன்னாரென்று நினைக்கிறீர்கள்? ''நீங்கள் சொல்லும் இரண்டு கதைகளும் அந்தப் புத்தகத்தில் இல்லையே!'' என்று தான்.

எனக்குச் சிரிப்பு வந்தது. ஏனெனில், முதல் நாள் இரவுதான் மேற்படி புத்த கத்தை எடுத்துப் புரட்டிப் பார்த்துக் கொண் டிருந்தேன். ஆகையால், ஸ்ரீமதி சொல்வது தவறு என்பதை நன்கு அறிவேன்.

''ரொம்ப நன்றாயிருக்கிறது! கதைகளே இல்லையா?'' என்றேன்.

''வெகு அழகு! எங்களை என்ன

## அமரர் கல்கி





''ஓடிப் போயிடலாமா டார்லிங்?''
''ஏன் இப்படிப் பயந்து சாகறீங்க. நடந்தே போகலாம்.''

- கோவை கிட்டு

வென்று நினைத்தாய்?'' என்றார் ஸ்ரீமான்.

நாங்கள் எவ்வளவு சொல்லியும் அந்த ஸ்ரீமதி கேட்க வேண்டுமே? கிடையாது. திரும்பத் திரும்பப் பிடிவாதமாய் 'அந்தப் புத்தகத்தில் இந்தக் கதைகள் இல்லை' என்றே சொல்லிக் கொண்டிருந்தார்.

''புத்தகத்தை எடுத்து வரச் சொல்லவா?'' என்று பயமுறுத்தினேன்.

அப்போதாவது அந்த ஸ்ரீமதி ஓய்வு கொண்டாரென நினைக்கிறீர்களா? கிடையவே கிடையாது. மீண்டும் மீண்டும் அந்தக் கதைதான்.

கடைசியாகப் புத்தகம் வந்தது. ஏடுகளைப் புரட்டினேன். ஏக காலத்தில் ஆறு கண்கள் புத்தகத்தை உற்றுநோக்கின. குறிப்பிட்ட கதைகள் அதில் இல்லை!

என்னால் நம்பவே முடியவில்லை. நேற்றிரவு பார்த்த கதைகள் இன்று எப்படி இல்லாமல் போகும்? ஸ்ரீமதிக்கு ஏதேனும் குட்டிச்சாத்தான் வித்தை தெரிந்திருக்குமோ என்று எண்ணலானேன். கடைசியாக, ஆராய்ந்து பார்த்ததில் விஷயம் தெரிய வந்தது.

முதல் நாள் இரவு நான் படித்தது அப்புத்தகத்தின் அழகிய விரிவான முன்னுரையை. இந்த முன்னுரையில் தாகூர் கதைகளின் அழகைத் தனித்தனியாக எடுத்துக்காட்டியிருந்த, நாங்கள் குறிப்பிட்டுப் பேசிய இரண்டு கதைகளைப் பற்றியும் அதில் பிரஸ்தாபம் இருந்தது. ஆனால், எக்காரணத்திலோ புத்தகத்தில் அவை விடப்பட்டிருந்தன. ஒருவேளை பக்கங்கள் அதிகமாகி விட்டபடியால் இரண்டாம் பாகத்தில் சேர்க்கலாம் என்று விடப்பட்டிருக்கலாம்.

நாங்கள் முன்னுரையை மேலெழுந்தவாரியாகப் படித்துவிட்டு, இங்கிலீஷில் கதைகள் படித்த ஞாபகத்தை வைத்துக் கொண்டு வாதம் செய்தோம். அந்த ஸ்ரீமதியோ ஆங்கிலத்தில் தாகூர் கதைகள் படிப்பதில்லையாதலால், முன்னுரையில் கண்ட கதைகள் புத்தகத்தில் விடப்பட்டிருந்தன என்பதைக் கவனித்திருந்தார்.

பெண்ணாய்ப் பிறந்தவர்களோடு விவாதம் செய்யக்கூடாதென நான் சொல்வது ஏனென்று இப்போது தெரிகிறதல்லவா? அப்பா! ரொம்பப் பொல்லாதவர்கள்! விவாதத்தை எப்போது நிறுத்துவதென்பதே அவர்களுக்குத் தெரியாது. முடிவுவரையில் வளர்த்திக்கொண்டே போவார்கள்.

அவ்வளவு நிச்சயமாய்த்தான் அந்த ஸ்ரீமதிக்கு தெரியுமே, இரண்டு ஆண் பிள்ளைகள் சொல்கிறார்களே என்பதை உத்தேசித்து, 'ஒருவேளை இருக்கலாம்' என்று ஒப்புக் கொள்ளலாமல்லவா? நீங்களும் நானுமாயிருந்தால் அப்படி ஒப்புக் கொள்வோம். ஆனால், இந்தப் பெண்ணாய்ப் பிறந்தவர்கள் மாட்டார்கள். சொந்தக் கணவன் விஷயத்தில் கூட கணவனுக்காகச் சமையல் செய்வது, சாப்பாடு போடுவது முதலிய சாதாரணக் கைங்கர்யங்கள் எல்லாம் அவர்கள் செய்யலாம். ஆனால், விவாதத்தில் விட்டுக்கொடுக்கும் விஷ

யம் மட்டும் அவர்களிடம் கிடையாது.

விவாதம் செய்யும் விஷயத்தில் ஆண் மக்களுக்குக் கிட்டக்கூடாததான ஒரு சாதனம் பெண்மணிகளுக்கு உண்டென்பதையும் மறந்துவிடக் கூடாது. மேற்சொன்ன தாகூர் கதை விவாதத்தையே கவனிக்கலாம்.

அந்த ஸ்ரீமதிக்குத் தாம் சொன்னதில் அவ்வளவு நிச்சயமின்றிக் கொஞ்சம் சந்தேகமாயிருந்தது என்று வைத்துக் கொள்வோம். நாங்கள் புத்தகத்தை எடுத்து வர ஆள்விட யத்தனிக்கையில், அவர் 'நான் சொல்கிறேன்; நீங்கள் ஒப்புக் கொள்ள மாட்டோமென்கிறீர்களே' என்பதாகச் சொல்லிக் கண்ணைக் கசக்க ஆரம்பித்திருந்தால், அதற்குப் பதிலாக நாங்கள் என்ன செய்ய முடியும்? பேசாமல், 'அம்மணி! அந்தக் கதைகள் இந்தப் புத்தகத்தில் இல்லையென்று ஒப்புக்கொண்டு விடுகிறோம். அதுமட்டுமா? அந்தப் புத்தகமே கிடையாது, ரவீந்திரநாத் தாகூர் என்பவரே இல்லையென்று தாங்கள் சொன்னாலும் ஒப்புக்கொள்ளத் தயாராயிருக்கிறோம்!' என்றுதானே சொல்ல வேண்டும்?



"உயிரோடிருக்கற எம்.எல்.ஏவுக்கு மறைந்த தலைவர்னு பட்டமா!"
"தேர்தல்ல ஜெயிச்சு எம்.எல்.ஏ. ஆனப்புறம் அவர் தொகுதிப் பக்கமே போனதில்லையாமே...!"
- மதுரை பாலா.கோவிந்தராஜ்

சீதை, சாவித்திரி, தமயந்தி ஆகியவர்களை நமது முன்னோர்கள் கற்புக்கு அணிகலன்களாகக் குறிப்பிட்டிருக்கிறார்களல்லவா? என்னுடைய பரீக்ஷையில் இவர்களெல்லாம் தவறி விடுகிறார்களென்பதை வருத்தத்துடன் தெரிவிக்க வேண்டியதாயிருக்கிறது. இவர்களில் ஒருவராவது தங்களுடைய புருஷர்களுடன் விவாதத்தில் விட்டுக் கொடுத்தவர்கள் அல்ல.

காட்டுக்கு வந்தால் இன்னின்ன கஷ்டங்கள் உண்டு என்பதை இராமர் சாங்கோபாங்கமாக எடுத்துச் சொன்னாரே, சீதை கேட்டாளா? அந்த நெருக்கடியான சமயத்திலும் அவர் சொன்னதையெல்லாம் ஆட்சேபித்து, விவாதம்தானே தொடங்கினாள்! அவளுடன் விவாதம் செய்வதைவிடக் காட்டுக்கே அழைத்துப் போய்விடலாமென்றுதானே இராமர் அவளை அழைத்துச் சென்றது. வேறெந்த காரணத்தைக் கொண்டாவது அத்தகைய பைத்தியக்காரச் செய்கையை ஒருவன் செய்ய முடியுமா? சாவித்திரி, தமயந்தி முதலியோரின் கற்பு லட்சணம் இதுதானே.

கணவனுடன் விவாதமே செய்யாத மனைவி யாராவது இருக்கிறார்களா? 'அவர்தான் ஒண்ணாங்கிளாஸ் பத்தினித் தெய்வம்' என்று நான் ஒப்புக்கொள்கிறேன்.

நேற்றிரவு ஓர் அற்புதமான கனவு கண்டேன். நமது நாட்டில் பெண்ணாய்ப் பிறந்தவர்கள் எல்லாருக்கும் வோட்டுரிமை கிடைத்துவிட்டது! ஸ்திரீகள் அனைவருமே சட்டசபை அங்கத்தினர்களாகி விட்டார்கள்.

அது முதல் வீடுகளில் புருஷன் மனைவிகளுக்குள் விவாதம் என்பது ஒழிந்தது.

ஆஹா! இந்தக் கனவு மட்டும் உண்மையானால்!

**- ஆனந்த விகடன் (25.03.1934)**

## லக்ஷ்மி மோகன்

ரிஸப்ஷனில் இருந்த கோட் சூட் அணிந்த பெண் அவளை வரவேற்று அமரச் செய்து, எக்ஸாம் பேப்பர்போல் ஒரு பெரிய ஃபார்மைக் கொடுத்து நிரப்பச் சொன்னாள்.

பிறந்த தேதி, உயரம், எடை, அட்ரஸ், படிப்பு என்று சகலவிதமான கேள்விகளுக்கும் கை ஒடிய பதில் அளித்துவிட்டு நிமிர்ந்தாள். இப்போது வேறு ஒரு பெண் வந்து, ரெடிமேட் புன்னகையுடன் அதனை வாங்கிச் சென்றாள். ''வெயிட் பண்ணுங்க'' என்றாள் ரிஸப்ஷனிஸ்ட்.

அங்கு வேலை பார்க்கும் எல்லாப் பெண்களும், கோட் ஸூட்டுடன் கிட்டத்தட்ட ஒரே உயரம் மற்றும் எடையில் உருவி விட்டாற்போல இருந்தார்கள். ஒருத்தருக்கும் கிள்ளி எடுக்க சதை இல்லை. 'இவங்கள்லாம் சாப்பிடவே மாட்டாங்களா?' என்று யோசித்துக்கொண்டிருந்தாள் அருணா. அப்போது அவளைவிட கிட்டத்தட்ட இரண்டு மடங்கு சைஸில் முக்காடிட்ட ஒரு மார்வாடிப் பெண் உள்ளே நுழைந்தாள். அருணா தன்னை ஒருமுறை பார்த்துக் கொண்டாள்.

அருணாவை ஒரு இயந்திரத்தில் ஏற்ற, இரண்டு நிமிடத்தில் பக்கத்திலிருந்த பிரிண்டரிலிருந்து சர்ரென்று ஒரு ஸ்லிப் வந்தது. அதனைக் கிழித்து அருணா கையில் கொடுத்து, ''வெயிட் பண்ணுங்க'' என்றார்கள் மறுபடியும்.

அதுவரை அருணாவுக்கு அப்படி ஒரு ஜாதகம் கணித்திருக்க வாய்ப்பில்லை. உடலின் கொழுப்பு சதவிகிதம், உபரிக் கொழுப்பின் அளவு, கரைக்க வேண்டிய



கொழுப்பின் அளவு, இருக்க வேண்டிய எடை என்று எல்லாவற்றையும் அந்தக் கெட்டிக்கார மெஷின் புட்டுப் புட்டு வைத்ததை வாசித்தபடியே காத்திருந்தாள். சிறிது நேரத்தில் அருகிலிருந்த ரூமுக்குள் போகச் சொன்னார்கள்.

'மேடம், இந்தாங்க இந்த சார்ட்டப் பாருங்க' என்று நீட்டினாள். ''நீங்க எத்தனை கிலோ குறைக்கணும்னு முடிவு பண்ணிக்கோங்க.'' ஐந்து கிலோ குறைக்க இந்த ரேட் ஆகும் என்று சில ஆயிரங்களைச் சொன்னாள். பத்து கிலோ குறைக்க இந்த ரேட் என்று பல ஆயிரங்களைச் சொன்னாள். ''பத்து கிலோ குறைக்கற பேக்கேஜ எடுத்தா அதுல மூன்று கிலோ ஃப்ரீயா குறைச்சுக்கலாம்'' என்று வேறு சொன்னாள். தலை சுற்றியது அருணாவுக்கு.

# கொழுப்பின் ஜாதகம்

திருவிளையாடல் நாகேஷ் ஸ்டைலில், தன்னால் கொடுக்க முடிந்த கட்டணத்தில் எவ்வளவு கிலோ குறைக்கலாம் என்றுகூட கேட்க நினைத்தாள். பிறகு கட்டுப்படுத்திக்கொண்டு, ''சரி மேடம். நான் ஹஸ்பெண்டோட கன்ஸல்ட் பண்ணிட்டு வந்து சொல்றேன்'' என்று வெளியே வந்தாள்.

இரவு வீடு திரும்பிய ஹரியிடம், போய் வந்த விவரத்தைச் சொன்னாள். ''எனக்கு அப்பவே தெரியும் இதெல்லாம் பெரிய இடத்து சமாசாரம்னு. நமக்கெல்லாம் சரிப்பட்டு வருமா? சரி சரி டிஃபன் ரெடி பண்ணு'' என்றபடி டீ.வியை ஆன் செய்தான்.

அன்றைய தலைப்புச் செய்திகளில் ஒன்று, நடிகை ஷில்பா ஷெட்டி யோகாவினால் தன் வாழ்க்கையில் கண்ட பயன் குறித்தும், ஆசனங்கள் குறித்தும் தொகுத்து டி.வி.டி.யாக வெளியிட்டிருப்பது. ஆவென்று வாயைப் பிளந்துகொண்டு உட்கார்ந்தாள் அருணா. 'இது ஒண்ணுதான் பாக்கி' என்றபடி சாப்பிட உட்கார்ந்தான் ஹரி.

மறுநாள் அருணாவின் செல்லுக்குக் கால். ''கே.எல்.பி.சி.லருந்து பேசறோம்ங்க. என்ன டிஸைட் பண்ணியிருக்கீங்க? இந்த மாசத்துக்குள்ள ஜாயின் பண்ணினாத்தான் டிஸ்கவுண்ட் உண்டு'' என்று பிட்டைப் போட்டார்கள்.

''வேணும்னா நானே வர்றேங்க'' என்று ஃபோனை வைத்தாள்.

சிலர் உண்மையிலேயே கொஞ்சம்தான் சாப்பிடுவார்கள். ஆனால் பிந்து கோஷ் சைஸுக்கு இருப்பார்கள். சிலர், ஸ்வீட், ஐஸ்க்ரீம், கேக் என்று வெட்டினாலும் குச்சி குச்சி ராக்கம்மாவாகத்தான் இருப்பார்கள். 'உக்கும், திங்கறது எதுனா உடம்புல ஒட்டுதானு பாரு... வினை பிடிச்ச உடம்பு' என்று அவர்களைச் சொல்வதுண்டு. ஆனால், இதற்கெல்லாம் காரணம் நமது குடலின் உறிஞ்சும் தன்மைதான்.

குண்டாக இருப்பவர்கள் தங்கள் உணவின் அதிகப் பகுதியை, கொழுப்பு அணுக்களாக மாற்றுகிறார்கள். ஆனால், ஒல்லியாக இருப்பவர்கள் கொழுப்பு உயிரி அணுக்களைக் கரைத்து எரிபொருளாக உபயோகிக்கிறார்கள். இவர்களிடம் கொழுப்பைக் கரைக்கும் சத்து அதிகமாக இருக்கும். ம்ம்ம் கொடுத்து வெச்சவங்க. ○

''பரம்பரையா எங்க குடும்பம், கூத்துக்கட்டுற குடும்பம். என்னோட பதினைஞ்சாவது வயசுல அப்பா காலமாயிட்டாரு. அப்ப அவரு விதைச்ச விதைதான் என்னை ஒரு ஆய்வாளனா மாத்தி இருக்கு!'' எனக் கூறும் சந்தியூர் கோவிந்தன், நடுகல் ஆய்வில் கடந்த ஒன்பது ஆண்டுகளாக இயங்கி வரும் இளைஞர்.

தற்போது அஞ்சலகத் துறையில் பணிபுரியும் இவர் சிறுகதை எழுத்தாளர். தூறல் என்ற சிற்றிதழை நடத்துபவர்.

''பத்து வருஷத்துக்கு முன்னாடி சேலம் மியூசியத்துல, கல்வெட்டுப் பயிற்சி குறித்து வகுப்புகள் நடைபெற்றன. பதினைந்து நாள் வகுப்புகளில் நானும் கலந்து கொண்டேன். மல்லூர் அருகே பொன்சொரி மலை மீது திருக்குறள் கல்வெட்டு உள்ளதாக ஒரு தகவல், அந்தப் பயிற்சி வகுப்பில் சொல்லப் பட்டது. நாம் பிறந்து வளர்ந்த பகுதியில், நமக்குத் தெரியவில்லையே என ஆச்சர்யத்துடன் இரண்டு கி.மீ. தூரம் மலை மீதேறி சென்று பார்த்தேன். ஒரு கல் மலையில் திருக்குறள், கல்வெட்டு எழுத்துகளாகப் பொறிக்கப்பட்டிருந்தது. அன்று துவங்கியது நடுகல் குறித்தான எனது தேடல். நடுகல் நம் பண்டையத் தமிழர் வாழ்வின் அழிக்கமுடியாத அடையாளச் சின்னங்கள். இவைகளைத் தேடி காடு மலைகளிலும், சோளக்கொல்லைகளிலும், ஏரிக்கரைகளிலும் அலைந்து திரிந்துள்ளேன். நடுகல் ஆய்வு தொடர்பான எனது நெடும் பயணங்களில், என்னுடன் துணைபுரிந்து வரும் நண்பர்கள் கு. உதயபாரதி, சூர்ய நிலா மற்றும் ஆ.ப.செந்தில்குமார் ஆகியோர்!'' என்கிறார் அவர்.

''ஒருநாள் முச்சூடும் சோறு தண்ணியில்லாம காடு மேடெல்லாம் அலைஞ்சு திரிஞ்சு, நடுகல் கண்டு பிடிச்ச அனு




பவங்கள் நெறைய. நடுகல் நமக்கு நான்கு பிரிவுகள்ல காணக் கிடைக்குது. வீரக் கல், நிறைக்கல், நவகண்டக்கல், விலங்கு கல் எனப்படுபவை. தற்கொலை செய்து கொள்பவர்களுக்கானது நவகண்டக்கல். ஒரு வீட்ல திருடன் புகுந்து, பொருட்களை மூட்டை கட்டிக்கிட்டு ஓடுறான். வீட்டு நாய் அவனைத் துரத்திக்கிட்டு ஓடுது. திருடன்,

நாயை அடிச்சுக் கொன்னுடுறான். வீர மரணம் அடைஞ்ச அந்த நாய்க்கு ஒரு நடுகல் வெச்சிருக்காங்க. அதுதான் விலங்கு கல். குறிப்பிட்ட நடுகல், கள்ளக் குறிச்சி அருகே எடுத்தவாய்நத்தம் கிராமத் தில் இருக்கு.

போர்ல வீரன் ஒருத்தன் சிங்கத்தோட மல்லுக்கு நிக்கறான். அதுல அவன் செத் துப் போயிடுறான். அவனோட சம்சாரம் அந்த உடலை, தேவ கன்னிமார்கள் துணை யோட தூக்கிட்டுப் போறா. அந்த வீரன் சொர்க்கத்துல சிவபதம் அடைஞ்சதாக எண்ணி, லிங்கத்துக்கு மாலையிட்டு தெய்வமா கும்பிடுறா. இந்த மூன்று நிலைக்காட்சிகளும் சிற்பங்களாக வடிக்கப்பட்ட நடுகல், சங்ககிரி பெருமாள் கோயில் வாசல்ல இருக்கு. இப்பவும் சாமி கும்பிட்டு வெளியே வர்றவங்க அந்த நடுகல்லைக் காணலாம்.

நாமக்கல் மாவட்டம், கூலிப்பட்டி கிராமத்தில் இளஞ்சிங்கத்தரையன் நடுகல் ஒன்று இருந்தது. தஞ்சையில் நிகழ்ந்த உலகத் தமிழ்மாநாட்டுக்காக அதனைப் பெயர்த்தெடுத்துக் கொண்டு சென்றார்கள். திரும்பி வரும்போது வெளிலேயே அது இரண் டாக உடைந்து

# ஆவணங்கள்

போனது. அதனை ஒட்டவைத்து சேலம் மியூசியத்தில் நட்டு வைத்துள்ள னர். அது பத்தாம் நூற்றாண்டு நடுகல் ஆகும்.

தூறல் திரைக்களம் சார்பாக நடுகல் பற்றிய ஆவணப் படம் ஒன்றினை இயக்கி வருகிறேன். நமது பாரம்பர் யத்தின் ஞாபகங்களைப் பதிவுசெய்யும் முயற்சியாக இதைக் கருதுகிறேன். எழுபது சதம் கடந்து, இன்னும் முப்பது சதம் பணிகள் உள்ளன. இடையில் பொருளாதாரச் சிக்கல்கள், நேரமின்மை. இருந்தாலும், நடுகல் ஆவணப் படம் நிறைவு பெற்றுவிடும் என்கிற நம் பிக்கை மட்டும் என் மனம் முழுவதும் நிறைந்துள்ளது!'' என்கிறார் சந்தியூர் கோவிந்தன்.

* கோவிந்தன்



எழுத்து : **ஸ்ரீரங்கம் திருநாவு**

படங்கள் : **ஆ.ப.செந்தில்குமார்**

# • ஜி.ஆர்.சுரேந்தர்நாத் •

# நீ இங்கு சுகமே...

அனு... என் காதலி. என்னோடு கல்லூரியில் படிப்பவள். ஹாஸ்டலில் தங்கிப் படித்து வருகிறாள். செமஸ்டர் விடுமுறைக்கு, ஊருக்குச் சென்றிருக்கிறாள். அதுவரையிலும் எப்படி ஒட்டப் போகிறேன் என்று தெரியவில்லை.

அனுவுக்கு ஃபோன் செய்யலாமா என்று தோன்றியது. பண்ணவேண்டாம் என்று கூறியிருக்கிறாள். ஆனாலும் மனசு கேட்கவில்லை. எனது மொபைலை எடுத்து, அனுவின் நம்பருக்கு அடித்தேன்.

''ஏய் பிசாசு... எப்படிடா கரெக்டா பண்ணணும்னு தோணுச்சு?'' என்றாள் எதிர்முனையில் அனு உற்சாகத்துடன்.

''ஏன்... எங்க இருக்கற?''

''கோயிலுக்கு வந்தேன். தனியாத்தான் வந்தேன். கப்புன்னு பிடிச்சிட்ட....''

''என்ன வேண்டிக்கிட்ட?''

''ம்... இந்த வருஷம் நல்லா மழை பெஞ்சு, நாடு செழிப்பா இருக்கணும்னு வேண்டிக்கிட்டேன்.''

''ஏய்... விளையாடாதே சொல்லு.''

''வேறென்ன வேண்டிக்கப் போறேன். பெருசுங்க பிரச்னை பண்ணாம, நம்ம கல்யாணம் நல்லபடியா முடிஞ்சா, வருஷா வருஷம் எங்க கல்யாண நாளுக்கு, எங்கயிருந்தாலும் உன்னைப் பார்க்க வர்றோம்மான்னு வேண்டிக்கிட்டேன்.''

''நல்ல காரியம் பண்ணின... நீ பாட்டுக்கும் ஏதாச்சும், எசகு பிசகா வேண்டாம விட்டியே...''

''ஏன்?''

''எங்கண்ணன் ஃப்ரெண்டு ஒருத்தனோட லவ்வர், நல்லபடியா கல்யாணம்





நடந்தா, ரெண்டு பேரும் மொட்டை போடறோம்னு வேண்டிக்கிட்டாளாம். கல்யாணம் முடிஞ்சு, ரெண்டு பேரும் மொட்டை அடிச்சுக்கிட்டு, கொடைக் கானல் ஹனிமூன் போனாங்க. அந்தக் கதையாயிடப்போவுது...'' என்றதற்கு அனு சத்தமாகச் சிரித்தாள்.

''யப்பா... இந்தச் சிரிப்பைக் கேட்டு எவ்வளவு நாளாகுது... உன்னை ரொம்ப மிஸ் பண்றேண்டி...''

''நான் மட்டும் சந்தோஷமாவா இருக் கேன்? தெனம் உன்னை தௌசண்ட் டைம்ஸ் நினைச்சுக்கறேன்... தெரியுமா?''

''எனக்கும் ஒரு வேலையும் ஓடலை... நீ போனதுலேயிருந்து பைத்தியம் பிடிச்ச மாதிரி ஆயிடுச்சு. இப்பக்கூட உன்னைப் பத்தித்தான் கவிதை எழுதினேன்.''

''என்ன கவிதை?''

கவிதையைக் கூறிவிட்டு, ''எப்படி யிருக்கு?'' என்றேன்.

# நான் அங்கு சுகமா?

''ம்... பரவாயில்ல... என்னைப் பத்தி எழுதியிருக்கியே... நல்லா இல்லன்னா சொல்ல முடியும்?''

''அதைவிடு... உன்னைப் பார்க்காம ரொம்பக் கஷ்டமா இருக்கு அனு. ஒரு தடவை உங்க ஊருக்கு வரட்டுமா? பைக்கை எடுத்தேன்னா, திருச்சிலருந்து கரெக்டா ரெண்டு மணி நேரம்தான்.''

''நான் எத்தனை தடவை சொல்லிட்டு வந்தேன்... தயவுசெஞ்சு இங்க வந்துடாதே... மாட்டேனோம்... அவ்வளவுதான். கொஞ்சம் பொறுமையா இருடா...

வேலை கிடைச்சு, லைஃப்ல செட்டிலாகற துக்குள்ள மாட்டிக்கிட்டோம்னா, அவ்வளவுதான். ஈஸியா பிரிச்சுடுவாங்க... நிறைய பேரு அந்த மாதிரிதான் பிரிஞ்சுருக்காங்க.''

''புரியுது அனு... ஆனாலும் மனசு கேட்கமாட்டேங்குது. சாயங்காலம் கம்ப்யூட்டர் க்ளாஸ் போறேல்ல... அங்க வந்து பாக்கறேனே...''

''சான்ஸே இல்ல.. தம்பி வந்து விட்டுட்டு, அழைச்சுட்டுப் போறான்.''

''ஒழிக..''

''யாரு?''

''அழகான பெண்களின் தம்பிகள்'' என்றதற்கு அனு சிரித்தாள். தொடர்ந்து நான், ''இங்க பாரு அனு... நீ ஒண்ணும் என்னைப் பார்க்கவேண்டாம். பேச வேண்டாம். நீ பாட்டுக்குப் போய்க்கிட்டே இரு. நான் ரோட்ல நின்னு ஜஸ்ட் பாத்துட்டு வந்துடறேன்.''

''அய்யோ... அதெல்லாம் வேண்டாம். சும்மா ஒரு நிமிஷம் பார்க்கறதுக்கு. ஏன் நூறு கிலோ மீட்டர் வர்ற?'

''அது போதும் எனக்கு. அதை வச்சே, சொச்ச இருபது நாளையும் ஓட்டிடுவேன்.''

''நோ... நீ வந்தேன்னா, அப்புறம் நான் உன் கூட பேசமாட்டேன்.''

''என்ன அனு?''

''புரிஞ்சுக்கோடா... நான் சொல்றதைக் கேட்பியா? மாட்டியா?''

''சரி'' என்றேன் சோர்வாக.

''இன்னும் இருபது நாள் தாங்கற மாதிரி அழுத்தமா ஒண்ணு தர்றேன்'' என்று கூறிய அனு, மொபைல் வழியே முத்தத்தை அனுப்பினாள். ''என்ன... வந்து சேர்ந்துச்சா?'' என்றாள்.

''ம்...''

''பை...'' என்று ஃபோனை வைத்தாள் அனு.

அவளுக்குத் தெரிந்தால்தானே பிரச்னை. சாயங்காலம் நாலு டூ ஆறு கம்ப்யூட்டர் க்ளாஸ் போகிறாள். அவள் ஊரில் உள்ளது, அந்த ஒரே கம்ப்யூட்டர் சென்டர்தான். பேசாமல் கம்ப்யூட்டர் சென்டருக்குச் சென்று, எதிரே எங்காவது ஒளிந்திருந்து, பார்த்துவிட்டு வந்தால் என்ன? என்று தோன்ற, மனம் குறுகுறுப்

**''கன்னடம், தெலுங்குப் படங்களில் முன்னணி ஹீரோவாக நடித்துவரும் எனக்கு, தமிழ்த் திரையுலகில், சரியான வாய்ப்புகள் இன்னும் அமையவில்லை. தமிழனாய்ப் பிறந்த எனக்கு இதில் சற்று வருத்தம்தான். 'அடடா என்ன அழகு' படம் இந்த வருத்தத்தைப் போக்கும்'' என்று நம்பிக்கையோடு பேசுகிறார் படத்தின் நாயகன் ஜெய் ஆகாஷ்.**

**இயக்குநர் டி. ஜெயமுருகன் பேசுகையில், ''என்னுடைய இயக்கத்தில் முரளி நடித்த வெளிவந்த 'ரோஜா மலரே' படம் பாடலுக்காகவே பரவலாகப் பலரது பாராட்டையும் பெற்றது. 'அழகோவியம் உயிரானது' பாடல் பட்டிதொட்டி எங்கும் எங்களைக் கொண்டு சேர்த்தது. அதே போலத்தான் இந்தப் படத்தில் ஒவ்வொரு பாடலும் பேசப்படும். 'அடடா என்ன அழகு' என்ற இப்படத்தின் தலைப்பை மட்டுமே வார்த்தைகளாகக் கொண்டு, தொடர்ந்து மூன்று நிமிடங்கள் ஒரு பாடல் இடம்பெறுகிறது. 'நினைத்தாலே இனிக்கும்' படத்தின் பாடல்கள் எவ்வாறு எஸ்.பி.பிக்கு புகழ் சேர்த்துக் கொடுத்தனவோ அதேபோல, இந்தப் பாடலும் அவருக்குப் பெரும் புகழைச் சேர்த்துக் கொடுக்கும். திறமையான ஜெய் ஆகாஷ் தமிழ்த் திரையுலகத்தில் கவனம்பெறாமல் போனது ஆச்சர்யம்தான். இந்தப் படத்தில் அவரது திறமைக்குச் சவாலான காட்சிகள் நிறைய இடம் பெற்றிருக்கின்றன. இவருக்கு இணையாக நிக்கோலஸ் என்ற புதுமுகம் ஹீரோயினாக அறிமுகமாகிறார். சிம்ரனுக்குப் பிறகு தமிழ்த்திரையுலகுக்குக் கிடைத்திருக்கும் நல்ல நடிகை. எல்லாவற்றுக்கும் மேலாக நடிகர் ரகுவரனின் கடைசிப் படம் இதுதான். நல்ல ஒரு நடிகரை இழந்து விட்டோம். 'அடடா என்ன அழகு' ரகுவரனுக்குச் சமர்ப்பணம்!'' என்கிறார். – கண்மணி**

பானது.

**நா**ன் மதியம் கிளம்பியபோது, சரியா மணி ஒண்ணரை. ''எங்கடா வெயில்ல போற?'' என்ற அம்மாவிடம், ''சினிமா வுக்கு...'' என்றேன்.

வெயில் சுள்ளென்று அடித்துக்கொண் டிருந்தது. ''ஜெய் அனு...'' என்று கூறி கிக்கரை உதைத்து, பைக்கை ஸ்டார்ட் செய்தேன். இப்போதே கிளம் பினால்தான், நான்கு மணிக்கு, அனு கம்ப்யூட்டர் வகுப்புக்குச் செல்லும்போது பார்க்க முடியும்.



'அடடா என்ன அழகு' படத்தில்...

ஊரை விட்டுத் தாண்டியவுடன் வேக மெடுத்தேன். அனுவின் ஊரை நெருங்கு வதற்கு பத்து கிலோ மீட்டர் முன்பு பைக் பங்க்ச்சராக... வாழ்க்கையே வெறுத்துப் போனது. கண்ணுக்கு எட்டிய தூரம் வரை ஒரு டீக்கடை கூட இல்லை... இதில் பங்க்ச்சர் கடையை எங்கே தேடுவது? வேறு வழியின்றி பைக்கைத் தள்ளிக் கொண்டு நடக்க ஆரம்பித்தேன்.

ஒரு கட்டத்துக்கு மேல் தாக்குப்பிடிக்க முடியவில்லை. புஸ்... புஸ்... என்று மூச் சிறைக்க, உடலெங்கும் வியர்வை வழிந் தோட... அந்த வெயிலில் நடந்தேன். கிட்டத்தட்ட 3 கிலோ மீட்டர் நடந்தபிறகு வந்ததொரு கிராமத்தில், நல்ல வேளை யாக பங்க்ச்சர் கடை இருந்தது. மணியைப் பார்த்தேன். மூணரை.

பங்க்ச்சர் ஒட்டிக்கொண்டு, நான் கம்ப் யூட்டர் சென்டரை அடைந்தபோது மணி நாலே கால். வாசலைப் பார்த்தேன். யாரும் இல்லை. இந்நேரம் அவள் உள்ளே சென் றிருப்பாள். சை... என்று பெட்ரோல் டேங்கின் மீது குத்தினேன்.

சரி... ஆறு மணிக்கு வகுப்பு முடிந்து திரும்பும்போது பார்த்துக் கொள்ளலாம். அதுவரை என்ன செய்வது என்ற யோசித்தேன். அனு, அவள் ஊரைப் பற்றிச் சொன்னதெல்லாம் ஞாபகத் துக்கு வந்தது. அவள் சுற்றித் திரிந்ததாகக் கூறிய இடங் களை எல்லாம் சென்று பார்க்கலாமே என்று தோன்றி யது. சிறிய ஊர்தான். ஒரு மணி நேரம் கூட ஆகாது.

எதிரே வந்த பெரியவரிடம், ''சிவன் கோயில் எங்கங்க இருக்கு?'' என்றேன். 'சிவன் கோயிலுக்கு வெளியே இருக்கும் மண்டபத்தில்தான். சிறுவயதில் அடிக்கடி விளையாடுவேன்' என்று அனு கூறியிருக் கிறாள்.

அனு ஓடியாடிய சிவன் கோயில் மண்டபம், வீட்டில் கோபித்துக்கொண் டால் அவள் வந்து உட்கார்ந்துகொள்ளும் பேரூராட்சிப் பூங்கா, அவள் படித்த அறிஞர் அண்ணா நடுநிலைப்பள்ளி... என்று எல்லாவற்றையும் பார்த்துவிட்டு, ஆறு மணிக்கு முன்பாக கம்ப்யூட்டர் சென்டருக்கு வந்து சேர்ந்தேன்.

எதிரே இருந்த டீக்கடைக்குப் பின்பக்க மாக, மறைவாக நின்று கொண்டேன். அருகில் இருந்த பொது கழிப்பிடத்தி லிருந்து வந்த துர்நாற்றத்தையும் பொருட் படுத்தாது, கம்ப்யூட்டர் சென்டர் வாச லையே பார்த்துக்கொண்டிருந்தேன்.

ஆறு மணியானவுடன், பெண்கள் கும்பலாக வெளியே வர ஆரம்பித்தனர். நான் ஆவலுடன், அனு தென்படுகிறாளா என்று பார்த்தேன். இல்லை... என்ன ஆயிற்று என்று தவிப்புடன் பார்த்துக்



''கரண்ட் மேட்டர, கருத்துப் படமா கேட்டா ஒரே இருட்டா வரைஞ்சிருக் கீங்களே... ஏன்?''

''கரண்ட் மேட்டரே 'கரண்ட் கட்'டுதான் சார்!''

- மதுரை முருகேசன்.

கொண்டு நின்றேன். ஆறேகால் ஆன பிறகும் அனு வரவில்லை. இன்று அவள் வரவில்லையோ? அல்லது முன்பே சென்றுவிட்டாளோ... என்று நான் குழம் பிக்கொண்டிருந்த தருணத்தில், எனது மொபைல் ஃபோன் அடித்தது. வேகமாக எடுத்துப்பார்த்தேன். அனு.

''எனதருமை காதல் பிசாசே... எங்கடா இருக்க?'' என்றாள் அனு.

''நீ இன்னைக்கு கம்ப்யூட்டர் க்ளாஸ் வரலையா?''

''வரலை... ஏன் கேட்கிற?''

''சரியாப் போச்சு போ.. உனக்குத் தெரி யாம, உன்னைப் பார்த்துட்டு போகலாம்னு வந்தேன். வந்து சேர, நாலேகால் ஆயிடுச்சு. சரி... இருந்து, ஆறு மணிக்கு நீ ரிட்டர்ன் ஆகறப்ப பாத்துட்டுப் போலாம்னு, நீ விளையாண்ட சிவன் கோயில் மண்டபம், பார்க்னு எல்லாத்தையும் பார்த்துட்டு, இங்க அரைமணி நேரமா, நாத்தத்துல நின்னுக்கிட்டிருக்கேன்... நீ எங்க இருக்க?''

எதிர்முனையில் சில வினாடிகளுக்குப் பதில் இல்லை. ''அனு...'' என்றேன்.

''அய்யோ... என்னடா... இப்படிப் பண் ணிட்ட? நீ ஒரு நிமிஷம் பார்த்தாக்கூட போதும்ன்னியா... கவிதையெல்லாம் வேற சொன்னியா... எனக்கும், உன் னைப் பார்க்கணும்னு ஆசை வந்துருச்சு. காலேஜ்ல, கூட படிக்கற பொண்ணுக்கு உடம்பு சரியில்லைன்னு பொய் சொல் லிட்டு, உன்னைப் பார்க்கலாம்னு திருச் சிக்கு வந்திருக்கேன். உனக்கு ஒரு சர்ப்ரைஸா இருக்கட்டும்னு, சொல் லாம வந்தேன். நீ என்னடான்னா, முந்திரிக்கொட்டை மாதிரி அங்க போய்ட்ட... உன்னைப் பார்க்க லாம்னு எவ்வளவு ஆசையா வந்தேன் தெரியுமா?'' என்றாள் அனு.

''நேரில் பார்த்திருந்தால் கூட, இவ் வளவு சந்தோஷமாக இருந்திருக்குமான்னு தெரியலை. என்ன பார்க்க நீ.. உன்னைப் பார்க்க நான்... இந்தக் கண்ணாமூச்சி ஆட்டத்துக்குள்ள இருக்கற லவ் சூப்பர்டி!''

''ஆமாண்டா... எனக்கும் என்னன்னே தெரியல. உன்னுக்குள்ள அப்படி ஒரு சந்தோஷம்...'' நீ இங்கு சுகமே... நான் அங்கு சுகமா? மனம் தானாகப் பாட ஆரம்பித்து விட்டது. ●



# பி.எஃப். பணத்தில் திருப்பணி!

செல்ஃபோன் மற்றும் இன்டர்நெட் சேவைக்கான அலைவரிசைத் தொகுப்பு விற்பனையில், மத்திய தொலைத்தொடர்பு அமைச்சர் ராஜாவின் குளறுபடியால் மத்திய அரசுக்கு 25,000 கோடி ரூபாய் வருவாய் இழப்பீடு என்று சர்ச்சை கிளம்பியது. அதில் தாம் எதுவும் குளறுபடி செய்யவில்லை; மத்திய அமைச்சரவையின் முடிவுப்படிதான் அலைவரிசை விற்பனை செய்யப்பட்டது என்று ராஜா பதில் சொன்னார். ஆனால் இந்த விவகாரத்தில் மத்திய நிதி அமைச்சகம், தொலைத்தொடர்புத் துறையிடம் இரண்டு கடிதங்கள் மூலமாக நிறைய கேள்விகளை எழுப்பியதாக, தில்லித் தகவல்கள் சொல்லுகின்றன. இதற்கிடையில் அலைவரிசைத் தொகுப்பைப் பெற்ற ஸ்வான் என்ற நிறுவனத்தில், தமிழக முதன்மைக் குடும்பத்தைச் சேர்ந்த இளைய பெண்மணிக்கு 26 சதம் பங்குகள் இருப்பதாக திடுக்கிடும் தகவல் உலா வருகிறது.

★ சமீபத்தில் நடந்த உள்ளாட்சி இடைத்தேர்தலில் 54 இடங்களில் போட்டியிட்ட தே.மு.தி.க. 3 இடங்களில் மட்டும் தான் வெற்றி பெற முடிந்தது. ஆனால் 6 இடங்களில் மட்டுமே போட்டியிட்ட சமத்துவ மக்கள் கட்சி 3 இடங்களில் வெற்றி பெற்றிருக்கிறது. ''எங்கள் கட்சியின் பெயருக்கேற்ப, எல்லா சமுதாயமும் வசிக்கும் பகுதியில் நாங்கள் வெற்றி பெற்றிருக்கிறோம். ஆனால் மீடியா எங்களை இருட்டடிப்பு செய்கிறது'' என்று நொந்து கொள்கிறார் ச.ம.க. பிரமுகர்.

★ கோயில் திருப்பணி என்றதும், நன்கொடை புத்தகங்களைப் போட்டு வசூலுக்குக் கிளம்பிவிடுகிற காலம் இது. ஆனால், எந்த வசூலும் இல்லாமல் தன் பிராவிடண்ட் ஃபண்டு நிதியைக் கொண்டு மட்டும், ஒரு கோயிலுக்கு திருப்பணியைச் செய்து முடித்த பெருந்தகையாளர், தலைமைத் தேர்தல் கமிஷனர் கோபாலசுவாமி. நாலாயிர திவ்ய பிரபந்தத்துக்கு ஜெகத்ரட்சகன் எழுதிய நயவுரையின் நான்காவது பதிப்பு சமீபத்தில் வெளியிடப்பட்டது. வெளியிட்டவர் : கோபாலசுவாமி. அவர் பேசுவதற்கு முன், மைக்கில் அவர் பயோடேட்டாவைப் படிக்க முயன்றார் ஒருவர். 'தேவையில்லை' என்று தடுத்து விட்டார் தேர்தல் கமிஷனர். அன்று மேடையில் பின்னணியில் பாற்கடல் நாராயணன் பள்ளிகொண்டிருந்தபடியால், செருப்பைக் கீழே விட்டு விட்டுத்தான் மேடையேறினார் கோபாலசுவாமி.

- ஸ்ரீநி

மூன்றாவது கண் (Third Eye) என்ற தலைப்பின் கீழ் சென்னை லலித்கலா அகாடமியில், சமீபத்தில் புகைப்படக் கண்காட்சி நடந்தது. முழுக்க முழுக்க பார்வையற்றோரின் செயல்பாட்டின் பதிவுகளை மட்டுமே கறுப்பு வெள்ளை புகைப்படங்களாக எடுத்து, மக்கள் பார்வைக்கு வைத்திருந்தார் புகைப்படப் பத்திரிகையாளர் சிப்ராதாஸ் (Sipra Das).



* ஷேவிங் செய்ய கண்ணாடி எதற்கு?



* ஆட்டம்தான் ஆதாரம்!



* சிப்ராதாஸ்



* விரலில் முளைத்த மூன்றாவது கண்!

''எது மேலாவது நம்பிக்கையிருந்தால் அதை அடைந்தே தீர வேண்டியதுதான்'' என்பதில் உறுதியாயிருப்பவர் சிப்ராதாஸ். ''யாரும் தொடாத தளத்தைத் தேர்வு செய்து தேடலைத் துவக்குவதால் கிடைக்கும் அனுபவம்தான், வாழ்வின் பாடம். அதன் சுகம் அலாதியானது'' என்றும், ''உலகம் ஒன்றே ஒன்றால்தான் நிரம்பியிருக்கிறது: அதுதான் நம்பிக்கை'' என்றும் சொல்கிறார் சிப்ரா.

இருளை மட்டுமே அறிந்திருக்கும் பார்

* மலை மீது ஒரு நம்பிக்கையேற்றம்!

# மூன்றாவது கண்!

வையற்றோரின் சாதனை வெளிச்சங்களை, வாழ்வியல் சவால்களை கறுப்பு வெள்ளை நிறங்கள் மிகச் சரியாகவே பிரதிபலித் திருந்தன. கண்காட்சியை விட்டு வெளியே வருகையில் நாம் எதைச்

* பாதையே பார்வையாய்!

* இசை வெளிச்சத்துக்கு விளக்கு வேண்டியதில்லை!

சாதிக்கலாம் என்ற கேள்வி துளிர் விடுகிறது. அது சிப்ராவின் எண்ணங்களாலா? அவரின் புகைப்படங்களுக்குள்ளிருந்த மனிதர்களின் தீரா நம்பிக்கைகளாலா? அட! நீங்கள்தான் சொல்லுங்களேன்!

புகைப்படங்கள்:

**மணிமேகலை நாகலிங்கம்**

கருத்து: **அமிர்தா**




# உயிர் பெறுமா

“ஊராட்சிகள் தன்னாட்சி பெற வேண்டுமென்பதற்காகவே, பஞ்சாயத்து ராஜ் சட்டம் கொண்டுவரப்பட்டது. ஆனால், நிதி ஒதுக்கீடு மற்றும் உரிய அதிகாரங்கள் வழங்காத காரணத்தால், ஊராட்சிகள் பல, செயலழிந்து போயிருக்கின்றன. போதாததற்கு ஊழல் தாண்டவமாடுவதால், தரமற்ற பணிகளே நடைபெறுகின்றன'' என்று அதிர்ச்சியூட்டுகிறார், திருவாரூர் மாவட்டம் செமங்கலம் ஊராட்சியின் தலைவர் அன்புச்செழியன். தி.மு.க.வைச் சேர்ந்த இவர், திருவாரூர் மாவட்ட ஊராட்சித் தலைவர்கள் கூட்டமைப்பின் செயலாளர். அவரிடம் பேசினோம்:

''திருவாரூர் மாவட்ட முன்னாள் தி.மு.க. செயலாளர் பூண்டி கலைச்செல்வன் கொடுத்த உற்சாகத்தின் அடிப்படையில்தான், நான் பொதுப்பணிக்கு வந்தேன். ஆனால், நிதி ஆதாரங்கள் இல்லாத நிலையிலும், உரிய அதிகாரங்கள் இல்லாத நிலையிலும் ஊராட்சித் தலைவர்கள், மக்களின் கோரிக்கைகளை நிறைவேற்ற முடியாது என்பதைப் புரிந்துகொண்டேன். பொதுவாகவே கிராமப்புற பஞ்சாயத்துகளுக்கு வருமானம் இருக்காது. இந்த நிலையில் தெரு விளக்குகள் பராமரிப்பு, சாலை பழுது பார்த்தல், எழுத்தர் மற்றும் மோட்டார் (தண்ணீர்) போடுபவரின் சம்பளம், தலைவர் பயணப்படி, உறுப்பினர்கள் கூட்டப்படி என்று **பல்வேறு செலவுகளை ஊராட்சிகளால் சமாளிக்க முடியாத நிலைமை. எங்கள் மாவட்டத்தில் ஆரூர் பஞ்சாயத்துக்கு 2500 ரூபாய்தான் கொடுக்கிறார்கள்.** ஒரு பஞ்சாயத்தின் கீழ் நான்கைந்து கிராமங்கள் இருக்கும். அவசர காலத்தில் வெள்ளத்தை அடைக்க மணல் மூட்டைகள் வாங்கக்கூட பணம் இருக்காது. டியூப்லைட் வாங்கப் பணம் இல்லாததால், ஆயிரக்கணக்கான ஊராட்சிகளில், தெரு விளக்குகள் எரிவதில்லை. இந்தச் செலவுகளைச் சமாளிக்க மாநில நிதிக்குழுவின் மான்யத் தொகையில் வழங்கப்படும் பொதுநிதி உடனே அதிகமாக்கப்பட வேண்டும். (இதை ஊராட்சி நிர்வாகத்தில் ஒன்றாம் நம்பர் கணக்கு என்று சொல்வார்கள்.) இது மாநிலம் தழுவிய பிரச்னை; விலைவாசி உயர்வுக்கேற்ப இந்தத் தொகைகள் உயர்த்தப்பட வேண்டாமா? அரசு உடனே கவனம் செலுத்தவேண்டும்.

அண்ணா மறுமலர்ச்சித் திட்டத்தில் அடிப்படையில் பல்வேறு நலப்பணிகள் நடக்கின்றன. ஆனால் **ஒன்றிய அளவிலேயே, ஒப்பந்தங்கள் முடிவு செய்யப்**

படுகின்றன. ஆளும் கட்சியின் ஒன்றியச் செயலாளர்தான் முடிவு செய்வார். இதில் கமிஷன், கட்டிங் என்று விளையாடுவதால் ஊராட்சிகளில் தரமற்ற வேலைகளே நடக்கின்றன. எந்த வளர்ச்சித் திட்டப் பணிகளைப் பற்றியும், ஊராட்சித் தலைவர்களுக்குத் தெரிவிப்பது கிடையாது. பணிகளுக்கான நிர்வாக ஆணை ஊராட்சிகளுக்கு அனுப்பப்படுவது கிடையாது. மாவட்ட ஆட்சியாளர் அளவிலும், ஒன்றிய அளவிலும், சகல விஷயங்களும் தீர்மானிக்கப்படுகின்றன. காண்ட்ராக்டர் ஜல்லி, மணலைக் கொட்டும்போதுதான், 'ஏதோ வேலை நம் கிராமத்துக்கு வழங்கப்பட்டிருக்கிறது' என்பது ஊராட்சித் தலைவருக்குத் தெரியும். இந்த நிலையில் பணிகளின் தரம் பற்றி அவர் எப்படி கேள்வி கேட்க முடியும்? மாவட்ட ஆட்சியாளரிடம் சிறப்புப் பொது நிதி இருக்கிறது. ஆனால், இந்த நிதியை ஊராட்சிகள் பெறவேண்டுமானால், பலத்த சிபாரிசு வேண்டும்.

முத்திரைத்தாள் வரி, குத்தகை ஆகியவற்றில் ஊராட்சிகளுக்குப் பங்கு கொடுத்தால் நிதி ஆதாரம் பெருகும். அதிலும் கனிமத் துறை, ஊராட்சி நிர்வாகத்தைப் பற்றிச் சிறிதும் கவலைப்படாமல் நிலத்தைத் தோண்டுவதற்கும், மண் எடுப்பதற்கும் கருங்கற்களை எடுப்பதற்கும், உரிமம் வழங்கி வருகிறது. வருவாய்த் துறைக்கும், ஊராட்சிக்கும் ஒருங்கிணைப்பு கிடையாது. எனவே பட்டா போன்ற விஷயங்களில் என்ன நடக்கிறது என்பதே ஊராட்சிகளுக்குத் தெரியாது. இதைவிடக் கொடுமை என்னவென்றால், மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட ஊராட்சித் தலைவர்களை நீக்கும் அதிகாரம் மாவட்ட ஆட்சியாளருக்கு உண்டு. பாராளுமன்றம் மற்றும் சட்டமன்ற உறுப்பினர்களைப் போல மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டவர்களை, கலெக்டர் எப்படி நீக்கமுடியும்? இதிலும் அரசியல் விளையாடுவதால் நிறைய பிரச்னைகள். வருடத்துக்கு ஒருமுறை நடக்கும் கிராம சபைக் கூட்டங்களில் பேசவேண்டிய பொருள் பற்றிக்கூட அரசேதான் தீர்மானிக்கிறது. இப்படிப் பல பிரச்னைகளுக்காக, எங்கள் கூட்டமைப்பு தில்லி வரை சென்று போராட இருக்கிறது. உள்ளாட்சி அமைச்சர் தளபதி ஸ்டாலின் பம்பரமாகச் சுழன்று பணிகளை ஆற்றுகிறார். ஆனால், ரப்பர் ஸ்டாம்பாக உள்ள ஊராட்சிகளை, செயல்திறன் உள்ளதாக மாற்ற நிதிகளும், அதிகாரங்களும் வழங்க வேண்டும்'' என்கிறார் அன்புச்செழியன்.

''ஊராட்சிகள் சுய நிர்வாக அமைப்

# ஊராட்சி?

## - தி.மு.க ஊராட்சித் தலைவர் குமுறல்



## தமிழக அரசு என்ன சொல்கிறது?

தமிழ்நாட்டில் மொத்தம் 12618 ஊராட்சிகள் இருக்கின்றன. கடந்த வருடங்களை ஒப்பிடும்போது இந்த நிதியாண்டில் அதிகபட்சமாக 4000 கோடி ரூபாய் ஊராட்சிகளுக்கு வழங்கப்பட்டிருக்கிறது. இதில், தேசிய ஊரக வேலை வாய்ப்புத் திட்டம், இந்திரா வீட்டு வசதித் திட்டம், சட்டமன்ற, பாராளுமன்ற உறுப்பினர்களின் தொகுதி நிதி போன்றவை அடங்கும். தவறு செய்யும் ஊராட்சித் தலைவர்களை நீக்கும் அதிகாரம், மாவட்ட ஆட்சியாளர்களுக்கு இருப்பதை நீதிமன்றமும் ஒப்புக்கொண்டிருக்கிறது. ஊராட்சிகளில் நிறைவேற்றப்படும் பணிகளின் தரம் குறித்து ஆய்வு செய்ய உரிய அமைப்புகள் இருக்கின்றன.

புகளாக இருக்கவேண்டுமென்றுதான் நமது அரசியல் சட்டமும் சொல்கிறது. அதே அடிப்படையைத்தான் பஞ்சாயத்துச் சட்டமும் சொல்கிறது. ஆனால், அவற்றுக்கு உரிய அதிகாரங்களும், நிதியும் வழங்க நமது அரசியல்வாதிகள் தயங்குகிறார்கள். தலைமைப் பொறுப்பிலிருப்பவர்கள் பேசும்போது, **'ஊராட்சிகள் தன்னாட்சி பெறவேண்டும்' என்று வாய் கிழியப் பேசுவார்கள். ஆனால் அதிகாரக் குவியல் மாவட்டத் தலைநகரிலும், மாநிலத் தலைநகரிலும்தான் இருக்கும்.** இதுதான் பொதுவான நிலை'' என்கிறார் உந்துனர் அறக்கட்டளையின் அறங்காவலரும், ஓய்வு பெற்ற ஐ.ஏ.எஸ். அதிகாரியுமான ஏ.கே. வெங்கடசுப்பிரமணியன்.

''எல்லா மாநிலங்களும் இப்படி இருக்கின்றன என்று சொல்லமுடியாது. மேற்கு வங்கம், கேரளா, கர்நாடகா மாநிலங்களில் தொடக்கக் கல்வி மற்றும் ஆரம்ப சுகாதார நிலையங்கள் ஊராட்சிகளின் நிர்வாகத்தில்தான் விடப்பட்டிருக்கின்றன. ஊராட்சிகள், மானியத் தொகைகளை மட்டுமே நம்பிக் கொண்டிராமல் தங்களுக்குத் தாங்களே புது நிதி ஆதாரங்களை உருவாக்கிக் கொள்ள வேண்டும். மக்களால் தேர்ந்தெடுக்கப்படும் ஊராட்சித் தலைவர்களை நீக்கும் அதிகாரம் மாவட்ட ஆட்சியாளருக்கு இருப்பது ஒரு நெருடல்தான். ஆனால் தவறு செய்யும் தலைவர் மீது நடவடிக்கை எடுக்க வேண்டுமே. இந்தச் சூழலில் **மாவட்டப் பஞ்சாயத்து பலமாகச் செயல்பட்டால், ஊராட்சியின் தவறுகளை அது தட்டிக் கேட்கலாம்.** ஆனால், துரதிர்ஷ்டவசமாக இந்த அமைப்பு தமிழகத்தில் வலுவாகவும் அழுத்தமாகவும் செயல்படாமல் மாவட்ட நிர்வாகத்தின் பிடியில் சிக்கித் தவிக்கிறது. ஊராட்சித் தலைவர்களைக் கூப்பிட்டுப் பேசி, பல தீர்வுகளைக் காணவேண்டும்'' என்கிறார் வெங்கடசுப்பிரமணியன்.

ஊராட்சித் தலைவர்களின் போர்க்குரலை உதாசீனப்படுத்தாமல், தமிழக அரசின் உள்ளாட்சித் துறை, அவர்களைப் பேச்சு வார்த்தைக்கு அழைத்திருக்கிறது.

- ஸ்ரீநி



# நாணயம்

க.ஒப்பிலிஅப்பன்



கண்ணப்பன், தான் வழக்கமாக வாங்கும் அரிசி மண்டியில், பொன்னி பச்சரிசி இருபத்தி ஐந்து கிலோ சிப்பத்திற்கான விலை ஐந்நூறு ரூபாயை, கடைக்காரரிடம் நீட்டினார்.

''சார்... ஐந்நூத்தி ஐம்பது... விலை ஐம்பது ரூபா ஏறிடுச்சு...'' என்றார் கடைக்காரர்!

''ஓ.. கிலோவுக்கு ரெண்டு ரூபாயா..?'' என்றவர், கூடுதலாக ஐம்பது ரூபாயையும் கொடுத்துவிட்டு, ''அரிசி சிப்பத்தை வழக்கம்போல வீட்டுக்கு அனுப்பி வைச்சுடுங்க'' என்றவர், ''ஆமாம், அதுக்குக் கூலி எவ்வளவு தரணும்...?'' என்றார்.

''கூலி... அதே அஞ்சு ரூபாதான் சார்...'' என்றார் கடைக்காரர்.

ஐந்து ரூபாய் நோட்டை கடைக்காரரிடம் கொடுக்கப் போனவர், சற்று நிதானித்து, ''ஆமாம்... அந்தக் கூலியாளும் அரிசிய வாங்கித்தானே சாப்பிடறான்...? இந்த விலையேற்றம் அவனுக்கும்தானே..? அப்ப அதே கூலி எப்படிச் சரியாகும்...? சிப்பத்திற்கான கூலி.. ஐந்தரை ரூபாய் இந்தாங்க...'' என்று கொடுக்க, ''நாணயஸ்தன்'' என்றான் கடையின் கூலியாள் சட்டென மலர்ந்து. ஒருகணம் சுண்டிவிட்ட நாணயமாய்ச் சுழன்றது கடைக்காரரின் முகம்.

''மன்னர், இவ்வளவு கோழையா இருக்கக்கூடாது!''

''என்ன விஷயம்?''

''கோட்டை மேல் 'அண்டை நாட்டு மன்னர்கள் வாழ்க'னு போர்டு வைச்சருக்கார்!''

- அம்பை தேவா



# தாயாகும் தயாபரி

## ஸ்ரீ லலிதா

**க**ல் எப்போது பேசும்?

'மரத்தில் மறைந்தது மாமத யானை; மரத்தை மறைத்தது மாமத யானை' என்று சொல்கிற மாதிரி, ஒரு கல்லுக்குள்ளே நாம் பார்க்கிறபடி பார்த்தால் உயிரோட்டத்தைக் காண்போம். 'கல்லைக் கண்டால் நாயைக் காணோம்; நாயைக் கண்டால் கல்லைக் காணோம்' என்கிற பழமொழி இதை யொட்டித்தான் எழுந்ததேயொழிய, வீதியில் செல்லும் நாயை அடிக்கக் கல் கிடைக்கவில்லை என்கிற விபரீதமான பொருளில் எழுந்ததல்ல.

கல்லுக்குள் இருக்கும் நாய் எப்போது தெரியும்? கல்லாக அதைப் பார்க்காமல் நாயாகப் பார்த்தால், 'ஆஹா, இந்த நாய் எவ்வளவு அழகாக இருக்கிறது?' என்று தோன்றும். கண்களிலே கரிசனத்துடன் பார்க்கிறபோது கல்லால் வடிக்கப்பட்ட பொம்மையின் உயிரோட்டம் நமக்குப் புலப்படும். 'கண்ணிலே அன்பிருந்தால், கல்லிலே தெய்வம் வரும்' என்று கண்ணதாசன் இதைத்தான் சொன்னார்.

'கண்ணிலே எப்போது அன்பு வரும்?' என்றால், தெய்வம் வெளியிலே இருக்கிறது என்று நினைத்துத் தேடுவதற்குப் பதிலாக, இங்கே, நமக்குள்ளேயே இருக்கும் தெய்வத்தின் பிரதிபிம்பத்தைத்தான் கல்லிலே பார்க்கிறோம் என்று உணர்கிறபோது, கண்ணிலே அன்பு வரும்!

இப்படி, வெளியிடத்திலே போய்த் தேடாமல் உன்முகமாகப் பார்த்தால் தெய்வானுபவம் கிட்டும் என்பதைப் புரிய வைக்கிறவளே அம்பாள்தான். சித்ஸ்வரூபமாக இருக்கிறாள். அந்த சித் ஸ்வரூபத்தை நம் உள்ளே தேடும்படி வழிகாட்டுகிறாள், அப்படித் தேடுகிறபோது அதைக் கண்டு உணர வைக்கக்கூடியவள்தான் **பிரத்யக் சிதி ரூபா**.

**அ**டுத்து வரும் நான்கைந்து நாமாக்கள், அம்பாள் எப்படி வாக் ஸ்வரூபமாக இருக்கிறாள் என்பதைச் சொல்லக் கூடியவை.

**பச்யந்தி** என்கிற வாக் (வாக்கு) ஸ்வரூபமாக இருக்கக்கூடியவள்; **மத்யமா** என்கிற வாக் ஸ்வரூபமாக இருக்கக்கூடியவள்; **வைகரீ ரூபா** என்கிற வாக் ஸ்வரூபமாக இருக்கக் கூடியவள். இப்படிப் பலவிதமான வாக் ஸ்வரூபங்களில் இருப்பவள். கொஞ்சம் ரகசியபூர்வமாக இந்த நாமாக்களுக்குப் பொருள் அமைந்திருக்கிறது.

பச்யந்தி என்கிற வாக் எப்படியென்றால், தொடக்கத்தில் வருவது - மென்மையானது. வைகரி என்பது ரொம்ப உத்கிருஷ்டமாக வரக்கூடிய, வலிமையான வாக்கு. இவை இரண்டுக்கும் இடைப்பட்டதாக இருக்கக்கூடியது மத்யமா.

இப்படி மூன்று விதமான வாக் ஸ்வரூபங்களாக அம்பாளே இருக்கிறாள். வாக் தேவதைகளால் அர்ச்சிக்கப்படுகிறாள்.

**பக்த மானஸ ஹம்ஸிகா** - ஸ்ரீ வித்யா உபாஸனை முறையில், அம்பாளை ஹம்ஸமாக ஆராதனை செய்வதென்பது குரு முகமாக உபதேசம் பெற்றவர்கள் கடைப் பிடிக்கக்கூடிய ஒரு தியான முறை.

மானஸரோவரத்தில் அம்பாள் ஹம்ஸிகாவாக - ஹம்ஸபக்ஷியாக வாஸம் செய்கிறாள். அதற்காகத்தான் பிரம்மா மான

ஸரோவர்ம் அமைத்தார்.

பிரம்மா அமைத்த அந்த ஏரியை எங்கே போய் நிர்மாணித்தார் என்றால், கைலாஸத்தில் அது இருக்கிறது என்று சொல்வதுண்டு. இந்த மானஸரோவரம் ஏரிக்குத்தான் நவீன பூகோளம் 'மாஃபம் லேக்' என்றொரு பெயர் கொடுத்திருக்கிறது. திபெத்திய மொழியில் மாஃபம் என்றால் மானஸரோவரம் என்று அர்த்தம். இந்த ஏரியிலிருந்துதான் பிரம்மபுத்ரா நதி உற்பத்தியாகிறது. பிரம்மா அமைத்த ஏரியிலிருந்து பெருகுவதால்தான் அதற்கு பிரம்மபுத்ரா என்று பெயர்.

## மானஸரோவர் குறியீடு

**பி**ரம்மா அமைத்த இந்த மானஸரோவரத்தில் அம்பாள் ஹம்ஸ பக்ஷியாக இருக்கிறாள். பக்தர்களுடைய மனமாகிற ஸரோவரத்தில் (ஏரியில்) அவள் ஹம்ஸ பக்ஷியாக இருக்கிறாள். அவளுக்கு ஹம்ஸேசுவரி என்றே ஒரு திருநாமம் உண்டு. ஆசார்யர் பாடுகிறபோது, இந்தத் திருநாமத்தைச் சொல்லி ஹம்ஸேசுவரன் - ஹம்ஸேசுவரி என்றே பாடுகிறார்.

இன்னொரு பொருத்தமும் இந்தத் திருநாமத்துக்கு (பக்த மானஸ ஹம்ஸிகா என்ற திருநாமத்துக்கு) உண்டு. ஹம்ஸ பக்ஷிக்கு ஒரு குணம் உண்டு - பாலையும் தண்ணீரையும் சேர்த்து வைத்தால் பாலை மட்டும் எடுத்துக்கொள்ளும் பாங்கு அதற்கு உண்டு; தண்ணீரைப் பிரித்துவிடும் என்று சொல்வதுண்டு.

பிரம்மாவின் வாகனம், சரஸ்வதியின் வாகனம் ஹம்ஸம். இவ்விருவரும் அறிவுக்குத் தேவதைகளாக - அதிபதிகளாக இருக்கக்கூடியவர்கள். நம் அறிவு எப்படி இருக்கவேண்டுமென்றால், நல்லவற்றை எடுத்துக்கொண்டு வேண்டாதவற்றை விட்டுவிட வேண்டும். உலகத்தில் எந்த விஷயமாக இருந்தாலும் அதில் இரண்டுமே இருக்கும் - பாலும் தண்ணீரும் கலந்து காணப்படுவதுபோல் நல்லதும் கெட்டதும் சேர்ந்தே இருக்கும். நல்ல விஷயத்தை மட்டும் எடுத்துக்கொண்டு மற்றவற்றை விட்டுவிட வேண்டும் என்று உணர்த்துவதற்காகத்தான் ஹம்ஸத்தில் ஆருடம் செய்து வருகிறார்கள் பிரம்மாவும் சரஸ்வதியும்.



அம்பாள் ஹம்ஸமாக இருக்கிறாள் என்றால், வித்யா உபாஸனைப்படி அதற்கு ரொம்ப அழகான பொருள் உண்டு. அதற்குள் நாம் இப்போது போக வேண்டாம். ஆனால், சாதாரணமாகப் பார்த்தோமானால், பக்த மானஸ ஹம்ஸிகாவாக இருப்பவள், தன் பக்தர்களிடத்திலே இருக்கக் கூடிய நல்ல விஷயங்களை எடுத்துக் கொண்டு, ஒருவேளை அவர்களிடத்திலே வேண்டாத விஷயங்கள் இருந்தால் அவற்றை மறந்துவிடக்கூடியவளாக இருக்கிறாள்.

அதேமாதிரி, அம்பாளை உபாஸிக்

கிறபோதும் நல்ல விஷயங்களை மட்டும் எடுத்துக்கொள்பவர்களாக பக்தர்களும் இருக்கவேண்டும் என்பதற்காகத்தான் **பக்த மானஸ ஹம்ஸிகா** என்கிற திருநாமம். குழந்தை ஏதாவது வைதால்கூட அம்மா அதைத் தூக்கிப் போட்டுவிடுவாள். குழந்தை ஒரு நிமிடம் அவளைப் பாராட்டும்; அடுத்த நிமிடம் 'போம்மா! உனக்கு ஒன்றும் தெரியாது!' என்று தூக்கிப் போட்டுவிடும். அப்போது அம்மா என்ன பெருமைப்பட்டுக் கொள்வாள் தெரியுமா...? 'எனக்கு ஒண்ணும் தெரியாதுன்னு சொல்லிடுத்து குழந்தை; அப்படிச் சொல்ற அளவுக்கு என் குழந்தை வளர்ந்துவிட்டதே!' என்று பெருமிதப்படுவாள். அந்த மாதிரி பக்தர்களிடத்திலே இருக்கிற நல்லதை மட்டும் பரிந்து எடுத்துக்கொண்டு, வேண்டாதவற்றைத் தள்ளிவிடும் தாய்மை குணத்தாலும் அம்பாள் **பக்த மானஸ ஹம்ஸிகா.**

பிரம்மா அமைத்த மானஸரோவரம் ஏரியிலிருந்து பெருகும் நதிக்கு பிரம்மபுத்ரா என்று பெயர்.

**காமேசுவர பிராணநாடி** - சிவ காமேசுவரனின் ஜீவநாடியாக இருக்கக் கூடியவள்.

## சாட்சி தேவதை

**கிருதக்ஞா** - நடக்கக்கூடிய எல்லா செயல்களையும் உணரக்கூடியவள். யார் எதைச் செய்தாலும் உணரக்கூடியவள். திரைமறைவில் நாம் சிலவற்றைச் செய்யலாம் என்று எண்ணிக்கொள்ள முடியாது. எல்லாவற்றையும் **அவள்** பார்த்துக்கொண்டிருக்கிறாள். சின்னக் குழந்தையாக இருந்தபோது ஒரு மகான் குருகுலத்தில் பயின்று கொண்டிருந்தார். அவரது ஆசார்யர் எல்லா மாணவர்களிடமும் ஆளுக்கொரு பழத்தைக் கொடுத்து, ''யாருக்கும் தெரியாமல் இதைச் சாப்பிட்டுவிட்டு வாருங்கள்'' என்றார்! இந்தக் குழந்தை மட்டும் சாப்பிடவில்லை. ஏன் என்று கேட்டபோது, ''யாருக்கும் தெரியாமல் எப்படிச் சாப்பிடுவது? எங்கே போனாலும் பகவான் பார்த்துக்கொண்டேயிருக்கிறாரே!'' என்றாராம் அவர். பிற்காலத்தில் ஒரு மகானாக உருவாயிற்று இந்தக் குழந்தை.

எல்லா இடத்திலிருந்தும் நம்மைப் பார்த்துக்கொண்டேயிருக்கக் கூடிய பரமாத்ம ஸ்வரூபமாக இருக்கக்கூடியவள்; நாம் எதைச் செய்தாலும், சிந்தித்தாலும் அதை உணரக்கூடியவள் **க்ருதக்ஞாவான ஸ்ரீ லலிதாம்பிகை.**

**காம பூஜிதா** - மன்மதனால் பூஜிக்கப்பட்டவள் என்பது ஓர் அர்த்தம். நல்ல ஆசைகளால் பூஜிக்கப்படக் கூடியவள், மனிதனுடைய நல்ல தன்மைகளால் பூஜிக்கப்படுபவள் என்பது மற்றொன்று.

**சிருங்கார ரஸ ஸம்பூர்ணா** - சிருங்கார ரஸத்தை - நல்ல சிருங்கார ரஸத்தை - தன் பக்தர்களுக்கு வழங்கக் கூடியவள். அதனால்தான் மன்மதனுடைய ஆயுதங்களைக் கையில் ஏந்தியிருக்கிறாள். சிருங்காரம் என்பது குற்றமில்லை; ஆனால், அது முறைப்படி இருக்கவேண்டும் என்பதை உணர்த்துகிற நாமம் இது.

(வளரும்)

# முள்ளை முள்ளால் எடுத்தேன்!

## - ரோஸ் நேர்காணல்

"எங்களைப் போன்ற திருநங்கைகளை மீடியாக்கள் இழிவாகவும், கேலிப் பொருளாகவும்தான் சித்தரிக்கின்றன. இந்த அவலத்தை மாற்றவும், திருநங்கைகளைப் பற்றிய நன்மதிப்பை மக்களிடையே ஏற்படுத்தவும், எங்களைக் கேவலமான பிம்பங்களாக அடையாளப் படுத்தும் மீடியாக்கள் மூலமே அதைச் சாதிக்க வேண்டும் என்ற லட்சியத்துடன்தான் நான் மீடியா துறையைத் தேர்வு செய்தேன்" என்று நம்பிக்கையுடன் பேசுகிறார் திருநங்கை ரோஸ்.

**"நீங்கள் எதிர்பார்த்த மாற்றம் வந்திருக்கிறதா?"**

"ஓரளவு வந்திருக்கிறது. 'இப்படிக்கு ரோஸ்' நிகழ்ச்சி ஸ்டார் விஜய் சேனலில் ஒளிபரப்பான பிறகு, தமிழ்நாட்டில் திருநங்கைகளைப் பார்க்கும் பார்வையில் மாற்றம் வந்திருக்கிறது. இதை என்னுடைய திருநங்கை நண்பர்கள் மூலம் அறிய முடிகிறது. ஒரு திருநங்கையிடமும், வரதட்சணை, பெண் சிசுக் கொலை, கணவன் - மனைவி இடையேயான மனக் கசப்புகள் என பல்வேறு சமூக பிரச்னைகளை பற்றி விவாதிப்பதற்குரிய அறிவும், மனித உணர்வுகளைப் புரிந்து கொள்வதற்கான திறனும் இருக்கின்றன என்பதை நிரூபித்திருக்கிறேன். இந்த வெற்றியைப் பெருமையாக உணர்கிறேன்.

இந்த வெற்றியும் பெருமையும் ஒரே நாளில் கிடைத்தவை இல்லை. நான் சந்தித்த போராட்டங்களும், அவமானங்களும் நிறைய. ஆரம்பத்தில் ஒரு பிரபல சேனலை நிகழ்ச்சியின் கான்செப்ட்டுடன் அணுகினேன். நான் திருநங்கை என்ற காரணத்தினாலேயே சேனல் நிர்வாகத்தினர் என்னிடம் பேசக் கூடத் தயாராக இல்லை. துரத்தாத குறையாக வெளியே அனுப்பினார்கள். இப்படி எத்தனையோ வலிகளைக் கடந்த பிறகு, ஸ்டார் விஜய்யில் என் கான்செப்டை அங்கீகரித்தார்கள். விஜய் டி.வியின் நிர்வாகத்தினருக்கு உலகளாவிய சிந்தனை இருந்ததும் இதற்கு முக்கியக் காரணம்."

**"மீடியாவையும் தாண்டி வேறு என்ன செய்கிறீர்கள்?"**

"தற்சமயம் லயோலா கல்லூரியில் தொலைக்காட்சித் தயாரிப்பு தொடர்பான படிப்பைப் பயின்று வருகிறேன். இந்தப் படிப்பு எனது தொலைக்காட்சி படைப்புக்கு வழிகாட்டியாக இருக்கிறது."

**"சக கல்லூரி மாணவர்கள் மத்தியில் உங்கள் மீதான பார்வை எப்படி?"**

"சக கல்லூரி மாணவர்களில் எழுபத்தைந்து சதவிகிதத்தினர் நட்புடனும், தோழமை உணர்வுடனும்தான் பழகுகிறார்கள். மாணவ நண்பர்களிடம் எந்த வித வித்யாசமான அணுகுமுறையும் இல்லை" என்றவர், மேலும், "எனக்கு 'கல்கி' என்ற திருநங்கை அறைத் தோழியாக உள்ளார். கல்கி 'சகோதரி' என்ற

தன்னார்வத் தொண்டு நிறுவனத்தை ஏற்படுத்தி, திரு நங்கைகள் தொடர்பான ஆக்கப்பூர்வமான பணிகளைச் செய்து வருகிறார். திருநங்கைகளுக்கென தனியான வெப்சைட்டையும் துவக்கி, அவர்களைக் கைத்தூக்கி விடும் சேவையில் இருக்கிறார்'' என்று தனது தோழியைப் பிரஸ்தாபிக்கிறார்.

''நான் சிலகாலம் அமெரிக்காவில் இருந்தேன். அங்கிருந்த திருநங்கைகள் இசை, கலாச்சாரம், பண்பாடு எனப் பல்வேறு துறைகளில் சாதனை புரிந்து வருகிறார்கள். இவர்கள்தான் எனக்கு இன்ஸ்பிரேஷன். அமெரிக்கா உட்பட பல்வேறு மேற்கத்திய நாடுகளில் திருநங்கைகளையும் மூன்றாவது பாலினமாக அங்கீகரித்துள்ளனர். நமது நாட்டிலும் இதுபோன்று திருநங்கைகள் அங்கீகரிக்கப்பட வேண்டும். நான் திருநங்கையாக மாறிய ஆரம்ப நாட்களில் என் குடும்பத்தினர் என்னைப் புறக்கணித்தனர். ஆனால், இன்று என்னை ஏற்றுக்கொண்டுள்ளனர். இப்படி எல்லா திருநங்கைகளும் அவர்களின் குடும்பத்தினரால் ஏற்றுக் கொள்ளப்பட வேண்டும் என்பதே எனது ஆசை'' என்கிறார்.

''இந்து மத புராணங்களில் அரவாணி கிரகமாகக் கூறப்படும் 'சனி'யை, பகவானாக பக்தியுடன் வழிபடுகிறோம். ஆணும், பெண்ணும் கலந்த அர்த்தநாரீஸ்வரரான சிவபெருமானைப் பூஜிக்கிறோம். ஆனால், இந்துக்கள் பெரும்பான்மையானவர்களாக இருக்கும் நமது நாட்டில் எங்களைப் போன்ற திருநங்கைகளுக்கு மட்டும் ஏன் இந்த இழிநிலை?'' என்ற கேள்வியுடன் முடிக்கிறார் ரோஸ்.

**- ராகவ்குமார்**



ஆங்கிலப் பேராசிரியையான ஈஷா டே வங்காளம் மற்றும் ஆங்கிலத்தில் பல நாவல்கள், சிறுகதைகள் எழுதியுள்ளார். சர்வதேச எழுத்தாளர் என்ற அங்கீகாரம், 'தி நாவல்ஸ் ஆஃப் ராஜா ராவ்' என்ற படைப்புக்கு பிறகு ஈஷாவுக்குக் கிடைத்திருக்கிறது. அவர் வங்காள மக்களின் உடையழகை நம்முடன் பகிர்ந்து கொள்கிறார்.

''பெங்கால் ஹேண்ட்லூம் புடைவைக்கு இங்கு மதிப்பு ஜாஸ்தி. வீட்டில் வேலை செய்யும் வேலைக்காரிகளுக்கும் பெங்கால் ஹேண்ட்லூம் புடைவை கொடுத்தால்தான் அவர்கள் முகத்தில் சிரிப்பைப் பார்க்கலாம். அவர்கள் மனசுக்கேற்றாற் போல் புடைவை கிடைக்கவில்லை என்றால் வேலையை விட்டுவிடுவார்கள்.

ஒவ்வொரு வருடமும் புதுவிதப் புடைவைகள், டிஸைன்கள் மார்க்கெட்டில் அறிமுகமாகும். இருந்தாலும் டாக்காய், டாங்காயில், காந்தா, முர்ஷிதாபாத் சில்க் மற்றும் பெங்கால் காட்டன்தான் வங்காளப் பெண்களின் முதல் சாய்ஸ்! எந்த ஒரு கூட்டத்திலும் வங்காளப் பெண்ணை ஈஸியாக அடையாளம் கண்டுகொள்ள முடியும்.

பழைய புடைவையில் போடப்பட்ட ஒட்டுத் தையல்தான் இன்று காந்தா சில்க், குர்தா, துப்பட்டா என ஹிட்டாயிருக்கிறது...'' என்கிறார் ஈஷா.

''கொல்கத்தாவில் இன்றும் பழைமை, பாரம்பர்யம் ஓரளவுக்குக் கட்டிக் காக்கப்படுகிறது என்றே சொல்ல வேண்டும். பெண்ணுக்கு இருபது வயது என்றால் அவள் தாய் கலர்ஃபுல்லாக ட்ரஸ் பண்ண மாட்டாள். சிம்பிளாக சோபராக ட்ரஸ் பண்ணுவாள்.

திருமணத்துக்கு மணமகளுக்கு கிரியேட்டிவ் அலங்காரத்துடன் 'தொத்தோ' புடைவைகள் பண்ணவே, மார்க்கெட்டிங் டிஸைனர்கள் அனேகம்!

எனக்குத் தெரிந்து கொல்கத்தாவில் கரியாகாட் பகுதியில் மட்டுமே ப்ளாட்ஃபார ஸாரி ஷாப்பிங் இருக்கிறது. வசதி உள்ளவர்களும் வந்து வாங்குவார்



கள். ப்ரெஸ்டிஜ், ஈகோ இதெல்லாம் கிடையாது. பேரம் பேசத் தெரிய வேண்டும். ரெடிமேட் ப்ளவுஸ் ஏராளமாகக் கிடைக்கும். டெய்லரிடம் போக யாருக்கும் பொறுமையில்லை. புடைவையை வாங்கியவுடன், நேரே ப்ளவுஸ் கடைக்குப் போய் வாங்கிக் கொண்டுதான் வீடு திரும்புவார்கள். சத்யஜித்ரேயின் சினிமாவில் கதாநாயகிகளின் ப்ளவுஸ் டிஸைனும் பேசப்பட்டது. லேஸ் ப்ளவுஸ், ஃபுல் ஸ்லீவ், பஃப் ப்ளவுஸ் என 'சாருலதா' ஸ்டைல் ஹிட்! ஸ்லிம்மாகத் தெரிவதற்கு இங்குள்ள பெண்கள் பனியன் மெட்டீரியலில் உள்பாவாடை போடுவார்கள். (அதுவா சேதி!) ஹேர் ஆயில் கொல்கத்தாவிலிருந்துதான் மற்ற இடங்களுக்குப் போகிறது. மீன் டெய்லி சாப்பிடுவதால் பெண்களுக்குத் தலைமுடி நன்றாக இருக்கும். அடுத்தது கடுகு எண்ணெய்! சமையலுக்குப் பயன்படுத்துவோம். இதில் பூண்டு போட்டுக் காய்ச்சி இடுப்பு, வயிற்றுப் பகுதிகளில் தடவினால் பருமன் குறையும். வலி நிவாரணியும் கூட!'' ப்யூட்டி சீக்ரெட்களைப்



* ஈஷா டே

# பழைய புடைவையில் புதிய ஓட்டு!




போட்டு உடைக்கிறார் ஈஷா.

'' 'வஸந்த் பஞ்சமி' என்கிற சரஸ்வதி பூஜை இளைஞர்களிடையே ஆனந்த பூஜை. வஸந்த ருதுவில் கொண்டாடப்படும் இந்தப் பூஜையன்று பெண்கள் மஞ்சள் வண்ணப் புடைவைதான் உடுத்துவார்கள். ஷிவ்லிபூ (பாரிஜாதம்) கொட்டிக்கிடக்கும் இந்தப் பருவத்தில் பெங்காலிகளைப் பொறுத்தவரை இது ஒரு வாலண்டைன் டே. கண்டிப்பாக அன்று காதலன்/காதலி கிடைத்துவிடுவார்கள் என்ற ஐதிகம். கிட்டத்தட்ட இது டேட்டிங் பூஜாதான்.''

- லதா சேகர்

குஜராத் புறப்படுவதற்கு முன்தினம், உள்ளடங்கிய மெகரோலி மாவட்டத்தில் குண்டுவெடிப்பு என்று செய்தி வந்ததும், போவதா வேண்டாமா? என்று கொஞ்சம் தயக்கம். குஜராத்தில் ஐ.ஏ.எஸ். அதிகாரியாகப் பணியாற்றும், (நம் ஊர் ஐ.ஏ.எஸ். அதிகாரி இறையன்புவின் தம்பி) திருப்புகழுக்கு ஃபோன் செய்து என்னுடைய தயக்கத்தைச் சொன்னதும், ''அதைப் பற்றி எல்லாம் கவலைப்படாதீர்கள்! நாங்கள் எல்லாரும் இருக்கிறோம்! பக்காவாக பாதுகாப்பு ஏற்பாடுகள் செய்யப்பட்டிருக்கின்றன! ஒன்றும் நடக்காது! தைரியமாகப் புறப்பட்டு வாருங்கள்!'' என்று உற்சாகத்துடன் வரவேற்றார். அப்புறம்தான் விமானம் ஏறினேன்.



* கிஷோர் சர்மா

அகமதாபாத் போய் இறங்கியபோது மக்கள் வெகு சகஜமாக தெருக்களில் நடமாடிக் கொண்டிருந்தார்கள். நவராத்திரி விழா ஏற்பாடுகளால் ஊரே அமர்க்களப்பட்டுக் கொண்டிருந்தது. 'உலகிலேயே மிகவும் நீளமான நடனத் திருவிழா' என்று கின்னஸ் உலக சாதனைப் புத்தகத்தில் இடம் பெற்றிருக்கிறது, குஜராத்தில் ஆண்டுதோறும் நடைபெறும் நவராத்திரி விழா. இந்த ஆண்டு அகமதாபாத் நகரில் பல்கலைக்கழக மைதானத்தில் நவராத்திரி திருவிழாவின் துவக்க விழா நடைபெற்றது. சிறப்பு விருந்தினர்கள் அத்வானியும் அவரது மனைவி கமலா அத்வானியும். அரசாங்கத்தின் சார்பில், குஜராத் இண்டஸ்டிரீஸ் நவராத்திரி விழா சொசைட்டி என்ற தொழில் துறை சார்ந்த அமைப்பு, விழாவை முன்னின்று நடத்தியது. ரிலையன்ஸ் தொடங்கி குஜராத்தின் அத்தனை பெரிய தொழில்துறை ராட்சசர்களும் விழாவுக்கு ஸ்பான்சர்கள். செக்யூரிடியும் படு டைட். மைதானத்தின் ஒரு பகுதியில் துவக்க விழா நடக்க, மறுபகுதியில் ஏகப்பட்ட ஸ்டால்கள். பாரம்பரிய குஜராத்தி உணவு வகைகளை ருசிக்க தனிப்பகுதி, கைவேலைப்பாடுகள் நிறைந்த கலைப் பொருட்கள் விற்பனைக்கு நிறைய ஸ்டால்கள், அரசாங்கத்தின் திட்டங்கள் குறித்த விளம்பரங்கள்

# அரசாங்க

என்று எங்கு பார்த்தாலும் விழாக்கோலம். வண்ண மயம்.

பிரம்மாண்டமான மேடை. அதன் முன் பகுதியில் நடுநாயகமாக போடப்பட்ட சோபாக்களில் குஜராத் கவர்னர் பண்டிட் நாவல் கிஷோர் சர்மா, அத்வானி தம்பதி, முதல்வர் மோடி, சட்டமன்ற சபாநாயகர் போன்றவர்கள் அமர்ந்திருக்க, பின்னணியில் மந்திரிகள், ஓரிரு நாட்களில் ஓய்வு பெறவிருந்த தலைமைச் செயலாளர் மஞ்சுளா சுப்ரமணியம், அடுத்து அந்தப் பொறுப்பை ஏற்கவிருந்த மூத்த ஐ.ஏ.எஸ். அதிகாரியான ராஜகோபாலன் உள்ளிட்ட பலரும் அமர்ந்திருந்தார்கள்.

''தீவிரவாதம் உலகத்தைப் பிரிக்கிறது; சுற்றுலா உலகை இணைக்கிறது. இது போன்ற மெகா திருவிழாக்களை, தொழில் துறையைச் சார்ந்தவர்கள் முன்னின்று

# குஜராத் பக்கம்



# நவராத்திரி

வரும் கைகளில் அகல்விளக்குடன் நின்றது ரம்யமானதொரு காட்சி. அதனையடுத்து மைதானத்துக்கு வெளியில் வாண வேடிக்கை. மொத்த மைதானமும் அண்ணாந்து பார்த்தது.

குண்டுவெடிப்பு சம்பவங்களால், ஆயி ரக்கணக்கில் மக்கள் கூடும் இடங்களில் பலத்த போலீஸ் பாதுகாப்பு தரபட் டிருந்தது. இருந்தபோதிலும் ரிஸ்க் எடுக்க விரும்பாமல், பல தெருக்களில் தங்கள் தெரு அளவில் சிறிய கார்பா நடன நிகழ்ச்சிக்கு ஏற்பாடு



நடத்துவது பாராட்டுக்குரியது. குஜராத்தின் நவராத்திரியும், கார்பா நடனமும் இன்று உலகமயமாகிவிட்டது'' என்று குறிப்பிட்டார் மோடி.

தொடர்ந்து, இந்தியாவின் 12 மாநிலங்களைச் சேர்ந்த 600 கலைஞர்கள் பங்கேற்ற பாரம்பரிய நடன நிகழ்ச்சிகள் மாநிலவாரியாக அடுத்தடுத்து நடைபெற்றன. ஒவ்வொரு நடனத்துக்கும் விதவிதமான காஸ்டியூம்களில் வந்து கலக்கிய கலைஞர்களுக்காக கைத்தட்டி, கைத் தட்டி ஓய்ந்துபோனார்கள் பார்வையாளர்கள். எல்லா இருக்கைகளிலும் ஒரு அழகான அகல் விளக்கும், ஆங்காங்கே தீப்பெட்டிகளும் வைக்கப்பட்டிருந்தன. நிகழ்ச்சியின் இறுதிக்கட்டத்தில் அனை

செய்திருப்பதை, இரவு ஒரு ரவுண்டு வரும்போது காண முடிந்தது. வயது வித்தியாசமில்லாமல் பெருசுகள்கூட கோலாட்டக் கட்டைகளைப் பிடித்து, தங்களை மறந்து ஆட்டம் போடும்போது அந்த ஏரியாவே அதிருதுல்ல!

**- எஸ். சந்திரமௌலி**



# ப்ளாட்ஃபார முத்துக்கள்!

சென்னைக்கு வந்த புதுசில், நண்பர்கள் மூலம் கேள்விப்பட்டு 'லேண்ட் மார்க்' (land mark) புக் ஷாப்புக்குப் போனேன். முழுக்க ஏ.ஸி. போடப்பட்டு, புத்தகங்களை அழகாகக் காட்சிக்கு வைத்திருந்தார்கள். அதற்கு முன் நான் பார்த்த பெரிய புக் ஸ்டால்... மதுரை - நியூசெஞ்சுரி புக் ஹவுஸ்! அதோடு ஒப்பிட்டு 'லேண்ட் மார்க்'கைப் பார்த்து மலைப்பில் என் மூச்சு நின்றுவிட்டது. எல்லாத் துறைகளிலும் உலக அளவிலான அற்புதமான புத்தகங்கள் இருந்தன. நான் வெகு நேரம் புத்தகங்களைப் பார்த்தேன். கடைசியில் ஜோக்ஸ் சம்பந்தமான, நூறு பக்கம் இருந்த ஒரு சின்ன புக்கை எடுத்தேன். அதை திருப்பிப் பார்த்தால் விலை இல்லை. சரி, இதை வாங்கி விடலாம் என அசால்டாக கௌண்டரில் போய் அதற்கு பில் போட விலையைக் கேட்க, தொப்பி அணிந்த (யூனிஃபார்ம்) ஒருவர், புத்தகம் பின்பக்கம் எதையோ உற்றுப் பார்த்துவிட்டு, 'ஆயிரத்து நூறு ரூபா' என்றதும் எனக்கு மூச்சு நின்று விட்டது! வழுவழு பேப்பரில்கூட இல்லாத சாதாரண புத்தகம் அது! நான் ஜென்டில்மேன் புன்னகையோடு மெல்ல அந்த புக்கை அவரிடமிருந்து வாங்கி வந்து மறுபடி அலமாரியில் வைத்துவிட்டேன்.

அதன்பின் வெகுநேரம் பல புத்தக விலைகளை மட்டுமே பார்த்தேன். எல்லாம் தாறுமாறாக இருந்தன! சம்பந்தப்பட்ட ஆசிரியர்களிடமிருந்து, தெரியாமல் திருடி வந்து விற்றால் என்ன விலை போடுவோமோ அப்படியிருந்தது. மற்றும் சில பிரபலமான கம்பெனியின் புத்தகங்கள் என்ற காரணத்துக்காக, நம் கொஞ்ச நஞ்ச பேங்க் பேலன்சையும் உருவிக்கொள்வது போன்ற விலை. மேல்தட்டுக்காரர்களுக்கு அது உண்மையில் பொக்கிஷம்! சாமானியர்களுக்கு அந்த இடத்தில் கிடைப்பது நல்ல ஏ.ஸி.யும் பின்னணி கஜல் மியூஸிக்கும்தான். வெயில் நேரத்தில் அரைமணி நேரம் நின்றுவிட்டு வந்தால் உண்மையிலேயே குளுகுளுவென சுகமாக இருக்கும்.

விகடனில் ஓவியர் அரஸிடம் ஒரு முறை பேசிக்கொண்டிருந்தபோது, ப்ளாட்ஃபார பழைய புத்தகக் கடைகளைப் பற்றிக் குறிப்பிட்டார். உடனே நான் மௌண்ட் ரோடு - சாந்தி தியேட்டர் அருகே உள்ள ப்ளாட்ஃபார புத்தகக் கடைகளுக்குப் போனேன். எதிர்பாராத அனுபவம். செகண்ட்ஸ் விற்பனைதான். மொத்தமாக நிறைய புத்தகங்கள் கலந்து கிடந்தன. மதுரை - தங்கரீகல் தியேட்டர் அருகே உள்ள ப்ளாட்ஃபாரக் கடைகளைவிட இதில் நிறைய வெரைட்டி இருந்தது. புத்தகம் ஓரளவு புதிதாகவும் இருந்தது.

நான் கார்ட்டூனிஸ்ட் என்பதால் தேடிப்பிடித்து 'மரியோ'வின் இரண்டு கார்ட்டூன் புத்தகத்தை எடுத்தேன். கைலி கட்டி பீடி குடித்துக்கொண்டிருந்த கடைக்காரரிடம், புரிய வேண்டும் என, 'இது மாதிரி பொம்மை படம் போட்ட புஸ்

# என்னை இயக்கிய ஹீரோக்கள் - 12




# இயக்குநர் சிம்புதேவன்

தகம் வேற ஏதாச்சும் இருக்கா?' என்றேன். என்னை அலட்சிய மாகப் பார்த்தபடி பீடி இழுத்தவர்... 'உங் களுக்கு இன்னா கார்ட் டூன் வேணும்? ஆர்.கே. லெக்ஷ்மண், சங்கர், டான் மார்ட்டின், அல்ஜெபி, செர் ஜியோ... யார் புக்கு வேணும்?' எனக் கேட்க, நான் அதிர்ந்து விட்டேன். அவர் சொன்னதில் சில கார்ட்டூனிஸ்ட்டுகள் பேரே எனக்குத் தெரியவில்லை. வியர்த் துப் போனது! நான் சுற்றும் முற்றும் பார்த்துவிட்டு, பதட்டத்தில் அப்பாவி யாக, 'நீங்களும் கார்ட்டூனிஸ்டா?' என்றேன்.

இந்தக் கைலி, பீடி பார்ட்டிகள் சம் பந்தப்பட்ட துறையினரைவிட, புரொ ஃபஷனலாக நிறையப் பேசுவார்கள்... எல்லாத் துறைகள் பற்றியும் தெரியும். அதன்பின் ப்ளாட்ஃபாரம் கடைகள் ஒன்று பாக்கி இல்லாமல் எல்லாவற் றுக்கும் சென்றேன். மௌண்ட் ரோடு தேவி தியேட்டர் அருகே, சாந்தி தியேட் டர் அருகே, திருவல்லிகேணி டெர் மினல், லஸ் கார்னர் ஓரம், வடபழனி, மூர்மார்க்கெட் என சென்னையின் பல ப்ளாட்ஃபாரங்கள் எனக்கு அத்துப்படி யாகின. மலிவு விலையில் உலகளாவிய புத்தகங்கள் எனக்குக் கிடைத்தன. கஜல் மியூஸிக்கும், ஏ.ஸி.யும் இல்லாத, சாமானியர்களின் 'லேண்ட் மார்க்'!

அப்படித்தான் முதன்முதலில், மௌண்ட் ரோடு போஸ்ட் ஆஃபீஸை ஒட்டிய ப்ளாட்ஃபாரம் கடையில் இருந்த சுந்தர் எனக்கு அறிமுகமானார். முதல் சந்திப்பில் ஆஸ்ட்ரிக்ஸ் புத்தகம் ஒன்றின் விலை கேட்டபோது, நார் மலான விலை சொன்னார். எனக்கு ஆச் சர்யம்! ப்ளாட்ஃபாரம் கடையிலும் - அவர்கள் எல்லைக்குள்ளேயே சிலர் கொள்ளை லாபம் பார்க்க நினைப் பார்கள். நான், 'குறைச்ச விலை மாதிரி இருக்கே!' என்றேன். 'பழைய புத்தகத் தில் எனக்கு ஒரு மார்ஜின் இருக்கு. அது போதும்! அதைத் தாண்டி மத்தவங்க காசு எங்களுக்கு வேண்டாம்!' என்றார். அந்தப் பண்பு என்னை மிகவும் கவர்ந்தது.

பொதுவாக ப்ளாட்ஃபாரக் கடையில்

பேரத்தில் புத்தகம் வாங்குவதில் பெரிய வியாபார உளவியல் இருப்பதைப் பார்த்திருக்கிறேன். புத்தகம் தேடுகையில் கடைக்காரர்கள் நம் கண்ணையும், செய்கைகளையும் பார்ப்பார்கள். நமக்கு எது தேவை என்பதைப் புரிந்து கொண்டு அதன் விலையை மட்டும் அதிகமாகச் சொல்வார்கள்! இந்தச் சவாலை நான் பிரமாதமாகச் சமாளிப்பேன். எனக்குக் கார்ட்டூன் புத்தகம் தேவையெனில், முதலில் கம்ப்யூட்டர் புத்தகங்களைப் பார்ப்பேன். பிறகு நாவல்கள் பார்ப்பேன். ஒரு வரலாற்றுப் புத்தகத்தின் விலை கேட்பேன். கடைக்காரர் குழம்பி விடுவார். கடைசியில் போனால் போகிறதென உபரியாகக் கார்ட்டூன் புத்தகங்களை எடுக்கும்போது, விலை குறைவாக இருக்கும். ஆனால், சில கடைக்காரர்கள் நாம் புத்தகத்தைப் புரட்டிப் பார்ப்பதிலேயே - இந்த ஃபிராடுத்தனத்தையும் கண்டுபிடித்து விடுவார்கள். அவர்களை ஜெயிக்க நாம் புத்தகம் பார்க்கையில் விதவிதமாக நடித்துக் குழப்பவேண்டும்.



* சுந்தர்

இந்த 'சைக்காலஜி போர்' சுந்தரிடம் இருக்காது. அவர் அண்ணன் சிவாவும் அப்படித்தான். இருவருமே கடையில் இருப்பார்கள். இருபது வருட அனுபவம். நேர்மையாகச் சம்பாதித்து இன்று 'சிவா புக் ஹவுஸ்' என்ற புத்தகக் கடையும் வைத்துள்ளார்கள். மற்றவர்களுக்கு முன்னுதாரணமான வாழ்க்கை.

அடிக்கடி புத்தகங்கள் வாங்கி, சுந்தர் எனக்கு நல்ல நண்பராகிவிட்டார். நான் கடைக்குப் போனாலே காஃபி வந்துவிடும். குடித்துவிட்டுத்தான் புத்தகங்களைப் பார்க்க ஆரம்பிப்பேன். பழைய புத்தகக் கடை என்பது கடல் மாதிரி. பொறுமையும், உழைப்பும் இருந்து நிதானமாகத் தேடினால், அற்புதமான முத்துக்கள் கிடைக்கும்! லேண்ட்மார்க்கில் கிடைக்காதவைகூட இங்கு கிடைக்கும். Newyarker (நூறு வருட கார்ட்டூன் தொகுப்பு), 500 Year History of American Political Cartoons, Punch collection போன்ற கிடைக்கவே முடியாத அபூர்வப்புத்தகங்கள் எல்லாம் எனக்கு இங்கு கிடைத்தன. அறிவியல், வரலாறு, தத்துவம் எனப் பல துறைகள் வாங்குவேன்.

ஜூனியர் விகடன் இதழ் தயாரிப்பில் இருந்தபோது, ஒருமுறை சுந்தரிடம் இருந்து ஃபோன் வந்தது. குசுகுசுப்பாக பேசினார். 'ஸார்! சீக்கிரம் வர முடியுமா? முப்பது வருஷ MAD புத்தக கலெக்சன் மொத்தமா வந்திருக்கு!' என்றார். எனக்கு ஒன்றும் புரியவில்லை.

அப்படியே விட்டுவிட்டு அவர் கடைக்கு ஓடினேன். MAD எனும் மேலை நாட்டு இதழ் நகைச்சுவையின் சூத்திரதாரி. அது கிடைத்ததென்றால் பொக்கிஷம் கிடைத்த மாதிரி! கிட்டத் தட்ட எண்ணூறு புத்தகங்கள் இருந்தன. எட்டாயிரத்துக்கோ என்னவோ மொத்த மாக எடுத்தேன். கையில் காசில்லை, பிறகு பணம் தருகிறேன் எனச் சொல்லி விட்டு ஆட்டோவில் எடுத்துச் சென் றேன். வாழ்க்கையில் முதன்முதலாக ஆட்டோவில் எடுத்துச் செல்லும் அளவு வாங்கியிருக்கிறேன். சின்ன வயதில் பாடப்புத்தகம் வாங்கிய அன்று உற்சாகத்தில் வெகுநேரம் தூக்கம் வராதே... அதேபோல் அன்றிரவும் நெடுநேரம் தூக்கம் வரவில்லை.

மேன்ஷனில் என் ரூம் முழுகம் புத்தகங்கள் நிறைந்திருக்கும். கஷ்டப் பட்டுச் சேர்த்தவை! கட்டில் முழுகம் புத்தகங்களை அடுக்கிவிட்டு நான் தரையில்தான் படுத்துக்கொள்வேன்.




ஒருமுறை ரூமைப் பெருக்கிக்கூட்ட வந்த மேன்ஷன் வேலையாள், கிளீன் பண்ணி முடித்துவிட்டு, 'ஸார், உங்க ரூம்ல நிறைய புத்தகம் சேர்ந்துருச்சு போல! நமக்குத் தெரிஞ்ச பழைய பேப்பர் எடுக்கறவர் இருக்காரு. நல்ல ரேட்டுக்கு எல்லாத்தையும் போட்டுரலாமா?' என் றான். நான் அதிர்ந்துபோய் கையெடுத்துக் கும்பிட்டு, 'இனிமே இந்தப் பக்கம் வந்துராத. நானே ரூமை க்ளீன் பண்ணிக்கிறேன். கிளம்பு முதல்ல!'' என்றேன்.

சினிமாவில் உதவி இயக்குநராகி வடபழனி போனபின், மாதம் ஒரு முறையாவது கடைக்கு வந்துவிடு வேன். Total Film, American Cinematographer போன்ற இதழ்கள் வாங்கு வேன். பழைய புக் கடையிலும்கூட சினிமா புக்ஸ் காஸ்ட்லியாக இருக்கும். சில புத்தகங்களை வாங்க யோசிக் கும்போது, சுந்தர் என் வறுமையைப் புரிந்துகொண்டு, 'பணம் பின்னால தாங்க. எடுத்துக்கோங்க!' என புத்தகத் தைத் திணிப்பார். நானும் எனக்குப் பணம் கிடைக்கும்போது கொடுப்பேன். சில சமயம் நான் பிஸியாக இருக்கும் போது நல்ல புத்தகங்கள் வந்தால், அவரே சேரன் ஸார் ஆஃபீஸுக் குக் கொண்டுவந்து தருவார். எந்தப் பிரதிபலனும் எதிர்பார்க் காதவர். பல நல்ல புத்தகங் களைக் கொடுத்து, என் துறை யில் என்னைப் பலப்படுத்தியவர் நண்பர் சுந்தர். இன்றுவரை தரு கிறார். நான் இயக்குநரானதற்கு அவரும் ஒரு நன்றிக்குரிய வினையூக்கி.

**(பேசுவேன்)**

● கலோசனா, ஸ்ரீரங்கம்

**ஞானக் கண்ணுக்கும், ஊனக் கண்ணுக்கும் என்ன வித்தியாசம்...?**

ஞானக்கண் - போதி மரம்... ஊனக் கண் - கபோதி மரம்...

● என்.காளிதாஸ், சிதம்பரம்

**கூட இருந்தே குழி பறிப்பவர்களை என்ன செய்வது...?**

முடிந்தால் அவர்களை விட்டு விலகித் தள்ளிப் போய்விடுங்கள்... முடியாவிட்டால் அவர்களை அவர்கள் பறித்த குழியிலேயே தள்ளிவிட்டுப் போய்விடுங்கள்...

● சங்கரி, தஞ்சை

**மறைந்த வயலின் வித்வான் குன்னக்குடியார் பற்றி...?**

'வயலின்-வாழ்வும்' என வாழ்ந்த மேதை... ரோம் நகரம் தீப்பற்றி எரியும் போது, நீரோ மன்னன் வயலின் வாசித்தானாம். நமது குன்னக்குடியார் அன்று இருந்திருந்தால், வயலினில் அமிர்தவர்ஷிணியை வாசித்து மழை பெய்ய வைத்து, எரியும் ரோமாபுரியை அணைத்துக் காப்பாற்றியிருப்பார். அவரது வயலின் பேசும் 'வாயலின்.'

● ஜே.வி.ஜே.கண்ணன், திருச்சி

**நமது பெயர் நீடித்து நிலைத்திருக்க என்ன செய்ய வேண்டும்...?**

ஆண்களாக இருந்தால் 'மெகா தேவன்' என்றும், பெண்களாக இருந்தால் 'மெகா லக்ஷ்மி' என்றும் பெயரை மாற்றிக் கொள்ளலாம்... டி.வி. சீரியல் போல நீடித்து நிலைத்து நிற்கும்.

● வி.ஜி. சத்தியநாராயணன், நங்கநல்லூர்

**வௌவால் பறவை ஏன் எப்போதும் தலைகீழாக தொங்கிக் கொண்டிருக்கிறது...? அது அப்படி என்னதான் பாவம் செய்தது...?**

வௌவால் மிகவும் புண்ணியம் செய்த பறவை... அதனால்தான் எப்போதும் எந்நேரமும் கோவில் கர்ப்பக் கிரகத்தில் கடவுளுக்கு வெகு அருகில் இருக்கும். நாம் என்னதான் தலைகீழாக



நின்றாலும், கோவில் நடை சாற்றிய பிறகு நம்மை உள்ளே விடமாட்டார்கள்.





● **த. புகழேந்தி, கூகூர்**
**படிப்புக்கும், அறிவுக்கும் சம்பந்தம் உண்டா கிரேஸி...?**

நான் படித்தது இஞ்சினீரிங்... அதில் பயன்படுத்தியது கொஞ்சனீரிங்தான். என் அறிவைப் பொறுத்த மட்டில் அது ஆசையாக ஏற்படுத்திக் கொள்ள விரும்பும் சம்பந்தம், நாடகக் கலையை வளர்த்த 'பம்மலுக்-கே-சம்பந்தம்.'

# கொலுவில்... பொம்மை ராஜா

● **த. சத்தியநாராயணன், அயன்புரம்**
**'குடும்பம்' என்ற கொலுவில் உங்கள் இடம் எது...?**

அந்தஸ்தில் 'பொம்மை ராஜா'... அதிகாரமோ 'அல்லி-தர்பார்.'

● **வாசுதேவன், அயிரோலி - பம்பாய்**
**தண்ணீரில் நீச்சல் அடிப்பது - வாழ்க்கையில் எதிர் நீச்சல் போடுவது... ஒப்பிடுக...?**

தண்ணீரில் நீச்சல் அடிக்க 'மூச்சை' அடக்க வேண்டும். வாழ்க்கையில் எதிர்நீச்சல் போட 'பேச்சை' அடக்க வேண்டும்.

● **நிருபமா, சென்னை**
**'முதியோர் தினத்தன்று' நீங்கள் பீச்சில் வாக்கிங் போனீர்களே... மற்ற நாட்களில் எப்படி...?**

வாக்கிங் போனாலும் போகாவிட்டாலும் எல்லா நாட்களுமே முதியோர் தினம்தான். நாள் ஆக ஆக நமக்கு வயோதிகம் கூடுவதை நினைவுபடுத்தத்தான், தமிழ் காலண்டரில் திங்கட்'கிழ'மை, செவ்வாய்க் 'கிழ'மை, புதன் 'கிழ'மை என்று 'கிழத்தை' சேர்த்திருக்கிறார்கள். முதியோரைப் பேணும் இளகிய மனம் கொண்ட இளைஞர்கள் ஆவோம் நாம்!

● **பி. ராமலெட்சுமி, அண்ணாநகர்**
**ஸார்...! உங்களுக்கு எந்த பிராண்ட் பால் பிடிக்கும்...?**

தரமான பிராண்ட் கேள்விகளைத் தாங்கி வரும், உங்கள் த'பால்...!'

பவித்ராவால் இப்போது தெளிவாக யோசிக்க முடிந்தது.

லட்சுமி என்று உண்மையில் ஒரு பெண்மணி இல்லை என்பதும், அவள் ஷிப்ராவின் மனத்தில் எழுந்த கற்பனைப் பாத்திரம் என்பதும் ஏற்கெனவே தெரிந்தது தான்.

தனது கண்டுபிடிப்பை வெளிப் படுத்தியபோது, உண்மைதான் என்பது போல் புன்னகைத்து ஒத்துக்கொண்டாள் ஷிப்ரா. என்றாலும் அப்போதே பவித்ரா எச்சரித்தாள். ''உங்க அம்மா, சின்ன வயசிலே உன்னை லட்சுமின்னு கூப்பிடு வாங்கன்றதாலே உன் மனசாட்சிக்கு லட்சு மின்ற பெயரை நீ வச்சுக்கிட்டது இருக்கட் டும். ஆனால் உனக்கு நீயே லெட்டர் எழுதிக் கொள்வதெல்லாம் ரொம்ப ஓவர். அந்தக் கடிதம் யார் கையிலாவது கிடைத் தால் என்னாவது?''

''அந்தக் கவலையே உனக்கு வேண் டாம். வேற யார் கையிலும் கிடைக்காது'' என்று ஷிப்ரா அழுத்தந்திருத்தமாகக் கூறிய தன் பின்னணி அப்போது புரியவில்லை. இப்போது புரிந்தது.

ஷிப்ரா லட்சுமிக்குக் கடிதங்களை 'எழுத'வில்லை. கணினியில் அனுப்பி யிருக்க வேண்டும். அதாவது லட்சுமி என்ற கற்பனைப் பாத்திரத்துக்காக இவளே ஒரு மின்னஞ்சல் முகவரியை உருவாக்கி, அந்த முகவரிக்குத் தன் சந் தோஷங்களையும் வருத்தங்களையும் வெளிப்படுத்தியிருக்க வேண்டும். ஏதோ ஒருவிதத்தில் மனத்தில் இருந்ததைக் கொட்டிவிட்ட திருப்தி இதில் கிடைத் திருக்க வேண்டும்.

'ஆனால் நீ எனக்கு ஏன் அந்த நம்பிக்கையான இடத்தைக் கொடுக்க வில்லை ஷிப்ரா? என்னிடம் எதைப் பகிர்ந்துகொள்ளத் தயங்கினாய்?'

இத்தனை சிந்தனைகளையும் மீறி பவித்ராவுக்கு அந்த உண்மை புலப்பட் டது. ஷிப்ரா லட்சுமிக்கு எழுதிய கடிதங் களைப் படிக்கமுடிந்தால், அவளது இறப்பு தொடர்பான மர்மம் விடுபட வாய்ப்பு உண்டு.

கணினியின் முன் அமர்ந்து 'இண்டர் நெட்'டுடன் அதைத் தொடர்பு கொள்ள வைத்தாள். பயன்படுத்துபவர் என்ற இடத்துக்கெதிரே 'ஷிப்ராபவித்ரா' என்று தட்டினாள். இதுகுறித்து இருவருமே ஏற் கெனவே பேசி வைத்துக் கொண்டதுதான். பவித்ராவுடையது 'பவித்ராஷிப்ரா'!

ஆனால் சங்கேதவார்த்தை என்ற இடத் துக்கெதிரே எதைப் போடுவது? திகைத் தாள். இதுகுறித்து ஷிப்ராவுடன் ஒருமுறை பேசியது நினைவுக்கு வந்தது.

''என் பாஸ்வேர்ட் எது தெரியுமா? இரண்டு மாநிலங்களுக்குத் தலைநகராக இருக்கிற ஊர்.'' சண்டிகர் என்பதை நேரடி யாகச் சொல்லாமல் கொஞ்சம் பொடி வைத்துக் கூறினாள் பவித்ரா.

''ஐயோ! உன் பாஸ்வேர்டும் ஊரின் பெயர்தானா?'' என்று வியந்த ஷிப்ரா, ''என் பாஸ்வேர்ட் என்ன தெரியுமா? அது

# நில்... கவனி... கொல்!




தென்னிந்தியாவிலே இருக்கும் ஊர். நமக்குப் பிடித்த ஊர். இருந்தும் இல்லாத ஊர்'' என்றாள்.

''சீ போ. நான் எவ்வளவு தெளிவாக க்ளூ கொடுத்தேன். நீ ஏன் இப்படிக் குழப்பறே?'' என்று கோபப்பட்டாள் பவித்ரா.

அன்று எவ்வளவு யோசித்தும் விடை தெரியவில்லை. அதன் பிறகு அது குறித்து இருவரும் பேசிக்கொள்ளவில்லை. என்ன தான் நெருக்கமாக இருந்தாலும் கணினியின் சங்கேத வார்த்தையைக் கேட்பது சரியில்லை என்ற காலம் கடந்த ஞானோதயம்!

'நாகரிகம் என்பதைத் தாண்டி அதைக் கேட்டு வைத்துக்கொள்ளாமல் போனோமே' என்று இன்று வருந்தினாள் பவித்ரா. இருவருக்கும் பிடித்த ஊர் எது? சென்னை? ஆனால் 'இருந்தும் இல்லாத ஊர்' என்றாளே!

இதையெல்லாம் விளக்க ஓர் அகராதி இருந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும்? அல்லது யாராவது வழிகாட்டி போல

அருண் சரண்யா

விளக்கக்கூடாதா? சட்டென அந்த எண்ணம் விரிவடைந்தது. வழிகாட்டி. அதாவது 'கைட்'. ஆர்.கே.நாராயண் எழுதிய புதினம். அவரது எழுத்துக்கள் இருவருக்குமே மிகவும் பிடிக்கும். அதுவும் 'ஸ்வாமியும் நண்பர்களும்' என்ற தலைப்பில் வெளியான கதைகள் ரொம்பப் பிடிக்கும். அந்தச் சிறுவன் வாழ்ந்த கிராமத்தின் பெயர் மால்குடி. சட்டென அந்த இழை பிடிபட்டது. மால்குடி என்பது நாராயணனின் கற்பனைக் கிராமம். ஆனால் படிப்பவர்களுக்கு அது தமிழக- கர்நாடக மாநில எல்லையில் அமைந்த நிஜ கிராமம் போலவே தோன்றும். 'இருந்தும் இல்லாத ஊர். இருவருக்கும் பிடித்த ஊர்'.

இறைவா நன்றி! சங்கேத வார்த்தை என்ற இடத்துக்கெதிரே 'மால்குடி' என்று ஆங்கிலத்தில் தட்டினாள். அடுத்த நொடி 'மன்னிக்கவும். உங்கள் பயன்படுத்துபவர் பெயரும் சங்கேத வார்த்தையும் ஒத்துப் போகவில்லை' என்ற அறிவிப்பு கணினித் திரையில் வெளியானது.

மனம் சோர்வடைந்தது. கூடவே அதற்கு முன்தினம் குமார் தன்னைச் சந்தித்தது நினைவுக்கு வந்தது.

ஷிப்ராவின் இறப்பைத் தனக்கு ஏன் தெரிவிக்கவில்லை என்ற அவன் கேள்விக்கு, ''உங்களுக்கு அந்தத் தகவல் தெரிவிக்கப்படவில்லை என்பதே எனக்குத் தெரியாதே. அதனாலே நீங்க இந்தக் கேள்வியைக் கேட்கவேண்டியது உங்க அண்ணனிடம்தான்'' என்றாள். பிறகு ஆழமாக அவனைப் பார்த்தபடி அந்தக் கேள்வியை வீசினாள்.

''ஷிப்ரா செத்துப் போறதுக்கு முன்னாலே கடைசியாக அவளோடு பேசினது நீங்கதான்'' என்று தொடங்கியவள், குமார் எதையோ சொல்ல வருவதைப் பார்த்து, ''அவள் இறந்த தகவல் உங்களுக்குத் தெரிந்திருக்கலாம். தெரியாமலும் இருந்திருக்கலாம். ஆனால் ஷிப்ராவுக்கு மொபைலில் நீங்க சொன்ன தகவல் என்ன? அதைச் சொல்லுங்க.''

குமாரின் முகத்தில் தடுமாற்றம் தெரிந்தது. அப்போது கூடத்திலிருந்த தொலைக் காட்சியில் பழைய பாடல்களை ஒளிபரப்பிக் கொண்டிருந்தார்கள். 'காகித ஓடம் கடலலை மீது' என்று சுசீலாவின் குரல்.

''எனக்கு இந்தப் பாட்டு ரொம்பப் பிடிக்கும். மறக்க முடியுமா படத்தில்



''மாமூல் குடுக்கற தைரியத்துல கபாலி ஏடாகூடமா நடக்கிறான்!''

''என்ன பண்றான்?''

''திருடின வீட்ல சுவர் பூரா கைரேகையை அப்பி வெச்சுட்டுப் போயிருக்கான்!''

- அம்பை தேவா



வரும் பாட்டு'' என்றான் குமார். பதிலைத் தவிர்க்கிறான் என்று தோன்றியது.

அதே சமயம் குமார் எழுதியிருக்கக் கூடிய கடிதத்தில் இருந்த வாசகத்தை இப்போது வேறு மாதிரி வடிவமைக்க முடியும் என்பது புரிந்தது. 'கசிலா'வுக்குப் பதிலாக 'மறக்க முடியுமா?' என்பதை அமைத்தால், 'டிசம்பர் 7 மறக்க முடியுமா? - குமார்' என்றாகிறது.

''குமார்... உங்களை நான் சில கேள்விகள் கேட்கணும்'' என்று பவித்ரா தொடங்க, சட்டென பரபரப்பாகக் கிளம்பினான் அவன். ''இப்ப அதுக்கு நேரமில்லே. அப்புறமா உங்களைச் சந்திக்கிறேன்'' என்றபடி பதிலை எதிர்பாராமலேயே கிளம்பிச் சென்றுவிட்டான்.

பவித்ராவுக்குக் குழப்பமாக இருந்தது. இது என்ன? பிரச்னையின் நுனி கிடைத்து விட்டது என்று நினைக்கும்போதெல்லாம் பாதியிலேயே அது நழுவி விடுகிறதே! நான் என்ன போலீஸ் உயரதிகாரியா, ஒரு படையையே இதற்காக நியமிக்க? போலீஸ் என்றதும் விக்ரமின் நினைவு வந்தது. விக்ரமிடமிருந்து ஏன் எந்தத் தகவலும் இல்லை? அவன் அமைதி தற்செயலானதா அல்லது அர்த்தம் நிறைந்ததா?

தன் கைப்பையைத் திறந்து ஷிப்ராவுக்கு வந்திருந்த அந்தக் கடிதத்தை எடுக்க முயற்சித்தபோது, கூடவே ஒரு விசிட்டிங் கார்டும் வந்தது. முன்பு தவறி எடுத்து வந்திருந்த ஷிப்ராவின் கைப்பையில் இருந்த அட்டை. எப்படி மறந்தோம்? நேரடியாகவே அங்கு சென்று பார்க்க முடிவெடுத்தாள்.

அந்த மருத்துவமனை நகருக்குச் சற்று ஒதுக்குப்புறமாகத்தான் இருந்தது. ''உங்களுக்குக் குழந்தை இல்லையா? கவலை வேண்டாம். எங்களை அணுகுங்கள்'' என்று வாசலில் காணப்பட்ட விளம்பரம் 'சீப்'பாகப்பட்டது.

திருமணமாகி ஐந்து வருடங்களாகியும் கருத்தரிக்காத ஷிப்ரா, இந்த மருத்துவமனையை எதற்காக அணுகியிருப்பாள் என்பதைப் புரிந்துகொள்ள முடிந்தது. இறக்கும்போது அவள் வயிற்றில் இரண்டு மாதக் கரு!

குருவும் சேர்ந்துதானே அவளுடன் வந்திருப்பான்? எல்லாவற்றையும் விட முக்கியமாக, தான் கருத்தரித்ததை ஷிப்ரா ஏன் தன்னிடம் தெரிவிக்கவில்லை?

கேள்விகள் மனத்தில் குடைய அந்த மருத்துவமனைக்குள் நுழைந்தாள் பவித்ரா. அவளுடைய தூரத்து உறவுக்காரி அங்கு செவிலியாக இருந்தது வசதியாகப் போனது. தேவைப்பட்ட விவரங்கள் கிடைத்தன.

**(திக்திக்)**

# கழுத்தை நெறிக்கும்... கற்பனை

''எனக்கு ஹார்ட் அட்டாக்கா டாக்டர்? - சுமார் நூறு தடவைக்கு மேல் பார்க்கும் மருத்துவர்களிடம் எல்லாம் கேட்டுக்கொண்டிருப்பார் சின்னசாமி. நெஞ்சுக்குள்ள ஒரு மாதிரி திடீர்னு வலி வருது; வியர்வையா கொட்டுது; மயக்கமா இருக்கு; அப்படீன்னா ஹார்ட் அட்டாக்தானே..? என சின்னசாமியைப் போல் நம்மில் எத்தனையோ பேர் எண்ணுவோம். ஆனால், சின்னசாமிக்கு வந்திருப்பது ஹார்ட் அட்டாக்கே இல்லை. 'Hypochondriasis' எனப்படும் மன வியாதி'' என்கிறார் மனநல மருத்துவர் ஆனந்தன்.

''நாற்பது வயது முதல் அறுபது வயது உடையவர்கள்தான் பெரும்பாலும் இவ்வகை மனநோயால் பாதிக்கப்படுகிறார்கள். குறிப்பாக வேலையிலிருந்து ஓய்வு பெற்றவர்களை இந்த நோய் அதிகளவில் தாக்கும். காலை 8.55க்கு பஸ் பிடிக்க வேண்டும்; 9.15க்கு அலுவலக வாசலை மிதிக்க வேண்டும்; மாலை 6.00 மணிக்கு அலுவலகத்தை விட்டுக் கிளம்பிட வேண்டும்... என ஒருவித ரொட்டீனுக்குப் பழக்கப்பட்டவர்கள், திடீரென அவற்றைவிட்டு விலக நேரிடும்போது, இந்தப் பிரச்னை மெல்ல விஸ்வரூபம் எடுக்கும். அதைப் போலவே எதிலுமே ரொம்பச் சுத்தம் பார்ப்பது, திரும்பத் திரும்ப கை கழுவிக்கொண்டே இருப்பது, வீட்டைத் துடைத்துக்கொண்டே இருப்பது... போன்ற செயல்களைச் செய்பவர்களும் இந்த மனநோயின் பிடியில் பாதிக்கப்படுவார்கள்.

அந்தக் காலத்தில் ஒருவருக்கு மனநோய் ஏற்பட்டால், 'தலைவிதி' மீது பழி போடுவார்கள். ஆனால், ஏகப்பட்ட ஆராய்ச்சிகளுக்குப் பிறகு, இன்றைய மருத்துவ உலகில், ஒருவர் மனநோயால் பாதிக்கப்படுவதற்கு முழுமுதற் காரணம் மரபணுக்கள்தான் என்று கண்டறிந்திருக்கிறார்கள்'' என்கிறார் ஆனந்தன்.



'''டாக்டர் எனக்கு அடிக்கடி தலை பயங்கரமா வலிக்குது. நான் இதோட ஐம்பது டாக்டர்களிடம் காண்பிச்சாச்சு. எல்லாருமே எனக்கு எந்தக் கோளாறும் இல்லைன்னு சொல்றாங்க. ஆனா, எனக்கு புற்றுநோய் வந்திடுச்சோன்னு பயமா இருக்கு' என தலைவலியைப் புற்றுநோயாக நினைப்பவர்களும், நெஞ்சு படபடப்பை ஹார்ட்அட்டாக் என நினைத்து ஏகப்பட்ட ஈ.ஸி.ஜிக்கள் எடுத்து பார்ப்பவர்களும் இந்த மனநோயால் பாதிக்கப்பட்டவர்கள் என்று அறிந்துகொள்ளலாம். இவர்கள் மிகவும் பரிதா

பத்துகுரியவர்கள் என்று சொல்லலாம். ஏனென்றால், 'எனக்கு விடாம தலைய வலிக்குதுன்னு சொல்லிக்கிட்டே இருக்கேன். ஆனா, யாருமே கண்டுக்கவே மாட்டேங்கறீங்களே, நான் என்ன பைத்தியமா, லூஸா?'ன்னு கேட்க ஆரம்பிப்பார்கள். இப்படித் தனக்கு ஏதோ ஒரு பயங்கர வியாதி வந்திருப்பதாக நினைப்பதுதான் அறிகுறி'' என்றவர் இவர்களுக்கான சிகிச்சை முறைகள் குறித்தும் பேசினார்.

''முதலில் ஏகப்பட்ட பரிசோதனைகள் செய்துவிட்டு உடலில் எந்தவிதக் கோளாறுமே இல்லை என்று முடிவானபின், இவர்கள் முதலில் சென்று பார்க்கவேண்டியது ஒரு மனநல மருத்துவரைத்தான். 'Fat file syndrome' எனச் சொல்லப்படக்கூடிய, கத்தையாக

புலம்பிக்கிட்டே இருக்காதீங்க' என மனநல மருத்துவர் கூற மாட்டார். இதைத்தான் empathy என்போம். நோயாளியின் தலைவலிக்கான காரணம் புற்றுநோய் இல்லை. அது சைனஸ் எனப் புரிய வைப்போம். பின் 'Therapeutic agreement' என்ற ஒன்றைப் போட்டுக் கொள்வோம். அதன்படி, 'வேறு வேறு மருத்துவர்களிடம் செல்லக்கூடாது. அடிக்கடி தொலைபேசியில் என்னை (மனநல மருத்துவரை) அழைக்கக்



* டாக்டர் ஆனந்தன்

# நோய்!



பல்வேறுபட்ட மருத்துவர்கள் கொடுத்த ப்ரிஸ்கிரிப்ஷன்களை அடுக்கி வைத்திருக்கும் இவர்கள், ஒரு நல்ல தேர்ந்த மனநல மருத்துவரிடம் செல்லும்போது, 'ஆமாம்... உங்களுக்குத் தலை பயங்கரமாக வலிக்கிறதுதான். என்னால் அந்த வலியையும் வேதனையையும் புரிந்துகொள்ள முடிகிறது' என்பார் மனநல மருத்துவர். குடும்பத்தார்போல, 'பாஸிட்டிவா நினைச்சுக்குங்க. உங்களுக்கு ஒண்ணுமே இல்ல. சும்மா மனபிரமைதான்.

கூடாது. இந்தப் பரிசோதனை, அந்தப் பரிசோதனை... என எதுவும் பார்க்கக்கூடாது' என்பதை வலியுறுத்தி விடுவோம். இதைப் பின்பற்ற ஆரம்பித்தபின் அவர்களுக்கு மருந்துகள் கொடுப்போம். அதன்படி பார்த்தால், சிகிச்சை ஆரம்பித்த ஆறு மாத காலங்களிலேயே தொண்ணூற்று ஒன்பது சதவிகித நோயாளிகள் குணமாகிவிடுவார்கள். ஆறு மாதங்கள் முடிந்த பின் திரும்பவும் (doctor dependency) மருத்துவரைச் சார்ந்து இருக்கும் நிலை வரக்கூடாது என்பதில் கவனமாக இருக்க வேண்டும்'' என்கிறார் மனநல மருத்துவர் ஆனந்தன்.

**– சம்பத்குமார்**

'இது என் கதை' அல்லது 'இது என் மண்ணின் கதை' என்ற அடைமொழியோடுதான் தமிழ் சினிமா இயக்குநர்கள் கதை சொல்ல ஆரம்பிப்பார்கள். ஆனால், இயக்குநர் சுசீந்திரன் சற்று வித்தியாசப்பட்டு, ''இது என் அப்பாவின் கதை'' என்கிறார். 'வெண்ணிலா கபடிக் குழு'தான் அந்தப் படம்.

''திண்டுக்கல் ஒட்டன்சத்திரம் ஏரியாவுல இருபது வருடங்களுக்கு முன்னாடி, நிஜமாகவே 'வெண்ணிலா கபடிக் குழு'ன்னு ஒரு கபடி டீம் இருந்துச்சு. என்னோட அப்பாதான் அந்த டீமோட கேப்டன். அந்த டீம்ல ட்ரெய்ன் ஆனவங்க ஆசிய லெவல்ல ஆடி கோப்பையைத் தட்டிட்டு வந்திருக்காங்க. அப்பப்ப அப்பா, அந்தக் கதையை என்கிட்ட சொல்வார். நான் சின்ன வயசுல சாப்பிட அடம்பிடிச்சப்ப, தூக்கம் வராம முரண்டு பிடிச்சப்ப... என என் அப்பாவோட கதைதான் என்னை ஒரு வேலிக்கொடி மாதிரி சுத்திக்கிடந்துச்சு. அந்தக் கதையில அங்கங்கே சீர் செஞ்சு, மெல்லிய ஒரு காதலை நுழைச்சது மட்டும்தான் என்னோட வேலை. மற்றபடி இது என் அப்பாவின் கதை; கபடியின் கதை. இந்த ஸ்கிரிப்ட் ரெடியானதும் முதன் முதல்ல இசையமைப்பாளர் சிவமணிகிட்டதான் கதை சொல்லப் போனேன். கதை சொல்லும்போதுதான், என் தயாரிப்பாளர் ஆனந்த்

* 'வெண்ணிலா கபடிக் குழு' படத்தில்...



# அப்பா... பிள்ளை..

''கடலில் தத்தளிக்கும் கட்டுமரத்திலிருந்து, கண்டெடுக்கப்படும் அந்தோணி, சமூக விரோதிகளிடமிருந்து கடலையும், கடலை நம்பி வாழும் மக்களையும், காப்பாற்றுவதுதான் கதை'' என்கிறார் அன்னம் ஃபிலிம் இன்டர்நேஷனல் சார்பாக 'அந்தோணி - யார்?' படத்தைத் தயாரிக்கும் சி. விஜயகுமார்.

''எனக்குக் கடல்சார்ந்த பிஸினஸ் அதிகம். அது எல்லாமே இரும்பு சம்பந்தப்பட்ட வேலை. அதனால ஒரு மென்மையான தொழிலா இருக்கணுமேன்னுதான் சினிமா தயாரிக்க வந்திருக்கேன். அப்பவும் என்னால கடலைவிட்டு வேற எதுவும் சிந்திக்க முடியல. என்னோட 'அந்தோணி - யார்?' படத்தின் கதைக்களம் கூட முழுக்க முழுக்கக் கடல்தான். கடலுக்கும் காதலுக்கும் இடையே பாலம் கட்டி நிற்பதுதான் கதை. இந்தப் படத்தோட சில காட்சிகளை இயக்குநர் சி.டி.பாண்டி எனக்குப் போட்டுக் காண்பிச்சார். அந்தக் காட்சிகள்ல 'ஷாம்'மோட நடிப்பைப் பார்த்து அசந்துபோயிட்டேன். தமிழ்ச் சினிமாவுல

சக்கரவர்த்தியைச் சந்திச்சேன். நான் கதை சொல்லும்போது, 'சென்னை 28' போன்ற ஸ்போர்ட்ஸை அடிப்படையா வெச்ச படங்கள் வெளிவந்து இருந்தன. அதனால யாரும் அதோட தாக்கம்னு சொல்லிடக்கூடாதேன்னு உள்ளுக்குள்ள ஓர் உதறல் வேறு. நான் சிவமணிகிட்ட கதை சொல்லி முடிச்சதும் பக்கத்துல உட்கார்ந்திருந்த ஆனந்த், இந்தப் படத்தை நாம பண்ணுவோம்னு சொன்னார். அதுவரைக்கும் இவர்தான் நம்ம படத்தோட தயாரிப்பாளர்னு தெரியாது. அப்படி டெக்னீஷியன்ஸ் ஒவ்வொருவரையும் கதையால அசத்தின படம் இது'' என்கிறார் இயக்குநர் சுசீந்திரன்.

படத்தின் தயாரிப்பாளர் ஆனந்த் சக்கரவர்த்தி ஒரு ஹாக்கி பிளேயர். இந்திய அளவில் ஆடியவர்.

# கடல்!



அவருக்குச் சரியான பிளாட்ஃபார்ம் இந்தப் படம் மூலமா அமையும் என்பது என் கருத்து'' என்கிறார் சி.விஜயகுமார்.



● 'நேசி' படத்தில்...

''சிறு வயதில் பிள்ளைகள் சிறுசிறு தவறுகள் செய்தால் அதை ரசித்துச் சிரிக்கும் பெற்றோர்கள், பருவ வயதில் பிள்ளைகள் காதலிக்கும்போது மட்டும் அதைப் பெரிய தவறு என்று எதிர்க்கின்றனர். பெற்றோருக்குத் தங்கள் நேசிப்பின் ஆழத்தைப் புரியவைக்கப் போராடும் பிள்ளைகளின் கதைதான் 'நேசி' படம்'' என்கிறார் இப்படத்தில் கதாநாயகனாக அறிமுகமாகும் விகாஸ். இவர் வேறு யாருமல்ல; நடன இயக்குநர் ஜான் பாபுவின் மகன்.

''என்னோட அப்பா, சினிமாவுல திறமையை மட்டுமே மூலதனமா வெச்சு வறுமையை ஜெயிச்சவர். இந்தப் படத்தோட இசை வெளியீட்டு விழாவுல பேசினவங்க எல்லாம், என்னைப் பத்தி பேசுவதைவிட என் அப்பாவைப் பத்திதான் நிறைய பேசினாங்க. அப்பதான் எனக்கு என் அப்பாவோட தொழில் பக்தி முழுசா புரிய ஆரம்பிச்சது. இந்தப் படத்தோட இயக்குநர் சரவண கிருஷ்ணா மிகச் சிறந்த படிப்பாளி. அவர்கிட்ட எதைப் பத்தியும் பேசலாம். அதுக்கு அடிப்படைக் காரணமே அவர் பாவலர் அறிவுமதி பட்டறையில உருவானதுதான். நீண்ட நாளுக்குப் பிறகு இசையமைப்பாளர் சிற்பி, கவிஞர் பழநிபாரதி இந்தப் படத்துல இணைஞ்சிருக்காங்க. அதனால பாடல்களுக்கு ரசிகர்கள் மத்தியில் பெரிய எதிர்பார்ப்பு ஏற்பட்டிருக்கு'' என்கிறார் விகாஸ்.

- கண்மணி

